திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:.

# சித்தாந்தஞானபோதம்.

## ஆஞ்சநேயராமவைபவபங்கம்.

இது

"வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்"

ஸ்ரீலஸ்ரீ

சோமசுந்தரநாயகரவர்களால்

இயற்றப்பட்டு,

ஸ்ரீநாயகரவர்கள்மாணாக்கரும்

திண்டிவனம் P. W. D. ஸூப்ர்வைஸரும்

ஆகிய

கு. சிங்காரவேலுமுதலியாரவர்கள்

வேண்டிக்கொண்டதன்பேரில்

ஷை நாயகரவர்கள்மாணாக்கரும்

சென்னைக் கிறிஸ்டியன்காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்

ஆகிய

நாகபட்டினம்

வேதாசலம்பிள்ளையவர்களால்

Madras City & C. N. Press

வெளியிடப்பட்டது.

1900.

உ

சிவமயம்.

# அறிவிப்பு.

---

துரைசாமிமூப்பனார் என்பவர் "பகவத்கீதைவசனம்" என்றொருநூல் வெளியிட்டிருக்கின்றனர். இதிலுள்ள சிவநிந்தைமுதலிய அஸப்யங்களை நிராகரித்து, யாம் செய்திருக்கும் "கீதார்த்தப்பிரகாசிகை" யை எவருமுணர்ந்தின்புறுமாறு விரைவில் வெளியிடுவோம்.

இங்ஙனம்,

**சைவசித்தாந்த சண்டமாருதம்.**

திருச்சிற்றம்பலம்

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருப்யோநம:

# சித்தாந்தஞானபோதம்.

## ஆஞ்சநேயராமவைபவபங்கம்.

காப்பு.

சங்கரனநுமானென்று வாய்பிளந்து சதுரிழந்தின்னல்சேர்ந்துள்ள
மங்குவார்செய்கை மாளவுஞ்சீதை மணந்தராகவனபரமென்று
சங்கைசெய்தழியு மானவருக்கந் தளர்ந்துவீழவருசிவஞானதம்
பங்குறையன்னைபயந்தருள்யானை பதம்பணிந்தேத்திவாழ்த்திடுவோம்.

நூல்.

“ஸ்ரீ ஆஞ்சநேயாவதாரதீபிகை, ஸ்ரீராமவைபவசிந்தாமணி” எனனும் இரண்டு சிறுநூல்கள் பரங்கிப்பேட்டை இலக்குமணப்பிள்ளை யென்பவரால சில வருஷங்களுக்கு முன்னர் வெளியிடப்பட்டன. அவற்றை யாமிப்போது பார்த்தோம். பரபட்சநிராகரணமும், சுபட்சஸ்தாபநமுமாக வெளிப்பட்டவவை கேவலம் சிவநிந்தையாகத் தோன்றினமையால், அவற்றினுபாசத்தை யெவர்க்கும் விளங்கக்காட்டிச் சிவோத்கர்ஷத்தை நிறுத்துவது எமக்கின்றியமையாப் பெருங்கடனெனத் துணிந்து, அவற்றின் மறுப்பாகிய இந்த நூலை (ஸ்ரீ ஞானிகள் க்ஷேமார்த்தம்) வெளியிட்டெகரித்தா மென்க.

பூர்வபட்ச நூல்களின்முகத்தில் “முகவுரை” என மகுடஞ்சூட்டி, இரண்டு பண்டிதர்கள் நூலாசிரியரைப் புகழ்ந்து பேசியிருக்கின்றனர். அவருள், முந்தியவர் பா. வேங்கடராமநாயகரென்பவர். இந்த நாயகர் நூலாசிரியருக்குமேல்

தமது ஸாமர்த்தியங் காட்டினர். எங்ஙனமெனின், "ஸ்ரீஆஞ்சநேயாவதார தீபிகையும், ஸ்ரீராமவைபவ சிந்தாமணியும் அவதாரத்தையும், வைபவத்தையுமாத்திரங் கூறுகின்ற நூலாகக்கொள்ளற்க. மற்றொன்றுவிரித்தன் முதலிய குற்றங்களுக்குள்ளாகாமல அறியவேண்டிய பலவிஷயங்களையும் கொண்டிருக்கின்றன" என்று புன சாக்கிரதையாகச் சில வரிகளைக் கிறிவைத்தனர். தமது தோழர் இலக்குமணபிள்ளை எடுத்த விஷயத்தைச் சிவநிந்தையாலேயே நிரப்பியிருக்கின்றாராகையால், அச்சிவநிந்தையை மற்றொன்று விரித்தலாகக் கொள்ளக்கூடாதென்று இவர் கூறியது பெருவஞ்சமென்க. சிவ பரஞ்சுடரை வந்திக்குஞ் சாம்பவர்களுக்கு மனம் புண்ணாகத்தக்க அஸங்கதங்களை நிறைத்துவிட்டு, இவை மற்றொன்று விரித்தலாகாது என்று மகிழ்ந்தது ஏழைமதியாகாதுகொலவோ? "திருமால கண்டபேரண்டமாக வவதரித்துச் சரபத்தைக கிழித்தெறிந்தனன்" என்று நூலாசிரியர் தமது சுவடியி லெழுதிவைத்திருப்பது எவ்வாறு கொள்ளத்தக்கதோ? ஒரு கிராம பாதுகாவலனைப பூஷிக்கத்தொடங்கியவன், அவனைப்பூஷித்துத் தன்மட்டினில்லாது ஏக சக்ராதிபதியாய் விளங்குமொரு அரசவள்ளலைச் சுட்டியிகழ்தலடுக்குமோ? அன்னோ? அரசவள்ளலொருவனைப் புகழத்தொடங்குங்கால், எவன் பாதசேவைசெய்யும் கிராம பாதுகாவலனை அவ்வரசனுக்கு அடிமையெனறது சாலாதோவெனின், நன்றுகூறினாய். ஆஞ்சநேயன குரங்கு. இராமன் மனுஷ்யன். சிவன் தெய்வம். சிவன் புகழைக் கூறுகையில் இராமனையும், இராமன் புகழைக் கூறுகையில் ஆஞ்சநேயனையும அடிமைகளென்றல் பொருந்தும். ஆஞ்சநேயனுக்குக கிட்டடவன் இராமனானல், இவ்விருவருக்குங் கிட்டவன் சிவனாகலாம். இவர்துவிஷ்ணுவைப் புகழுகையில், இலக்குமி - அநந்தன் - கருடன் - அநுமான்-விஷ்வக்ஸேனர்-ஆழ்வார்கள் - ஏனைய விஷ்ணுபரிஜனங்கள் முதலியவர்களைச்சுட்டி, இவர்களால் விஷ்ணுமூர்த்தி

வந்திக்கப்படுகின்றனர் என்று இவர் துதிப்பாராயின், அது மாறென்று விரித்தல என்னும் குற்றத்தின்கீழ் அடங்காது. விஷ்ணுவினது கறுப்புமயிர் கிருஷ்ணனை, வெள்ளைமயிர் பலராமன், பரசுராமன் உதைபட்டான். இரகுராமனை உதைத்தானென்று கூறுவனவும் மற்றொன்று விரித்தலாகாது கிருஷ்ணன் குந்திகாலில் வீழ்ந்தான், இராமனை முனிவர்காலில் வீழ்ந்தான், கைகேசிகாலில் வீழ்ந்தான், கண்டவர்காலில் வீழ்ந்தான், கண்ணன் வேடனம்பால் இறந்தான், இராமன் சரயுநதியில் வீழ்ந்திறந்தான் எனடனவும் வைஷ்ணவர்கள் கொண்டாடும் விஷ்ணுமகிமையாக நிலைத்தலால் இவையும் மாறொன்று விரித்தலாகாது. இவ்வாறு கூறிக்கொள்வதொழிந்து அதனைகடந்து விவகரித்தது அஸாமஞ்சஸமாயினதறிக. "கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு குடிகெடினும்" என்றும், "மாலயனுமிந்திரனும் வாழுவதாய் மாளுவதாஞ் சாலமயல்பார்த்துத் தலையசைப்பர்" என்றுஞ் சிவஞானிகளோது தகிவாழுமறபவாழ்வினையுடைய பசுபிராணிகளிற்சேர்ந்த விஷ்ணுவையும், அவரது அவதாரங்களையும் புகழுகையில ஸர்வசேதஸ. பசுபதியாகிய சிவ பரஞ்சுடரைக் குறைமதிகொண்டிகழ்வது பாவத்தின பயனேயாமெனக,

இனி யிம்முகவுரைக்காரர நூலாசிரியர் நூல்செய்ததற்குச் சில காரணங்கூறினார். அதனையுமீண்டநுவதித்து மறுத்தொழிபபாம. கம்பரையாவது அவர் நூலையாவது யாரேனு மிகழ்ந்தால் நூலாசிரியர் பொறாராம். சைவருட் சிலர் அவரது அபிமகத்திற்கு விரோதமாக இகழ்ந்தமையே அவரை நூலெழுதத்தூண்டியதாம பரமசந்தோஷம். "அவரெழுதிய நூலை இம்முகவுரைக்காரர மெச்சினரேயன்றி யாம் துச்சமாகவே கழித்தோம். சைவர்களிகழ்ந்தார்களென்று கோபித்தெழுந்தவர அவ்விகழ்ச்சியை முன்னெடுத்துக் காட்டாமல "சம்பாட்டாழ்வாரைப் பாரசைவரென்றும், அவர் செய்தருளிய இராமாயணத்தைத் திருத்தொண்டர் புராணமென்னும்

பெரியபுராணம்போன்ற சைவநூலென்றும் சைவராகிய தொழுவூர் வேலாயுத முதலியார் நன்குபுகழாநிற்க" என்று சைவர் புகழ்ந்தமையை யெடுத்துக்காட்டிய தென்னையோ? கம்பன் ஜாதியில் ஓச்சன். ஓச்சர்கள் சிவசம்பந்தமான காளிபூஜைசெய்பவர்கள். சிவ ஸம்பந்தத்தால் பிராமணர்கள் மஹாசைவரென்று பெயர்பெற்றதுபோலச் சிவஸம்பந்தத்தால் ஓச்சர்கள் பாரசைவரென்று பெயர்பெற்றனர். இதனால், கம்பனைப் பாரசைவனென்று எம்மவர் கூறியது சாலப்பொருந்தியதே. கம்பனைக் கம்பநாட்டாழ்வாரென்று கொண்டாடுமெதிரிக்கு அவனைப் பாரசைவனென்றுகூறியது புகழாவதெங்ஙனம்? இவரது பதின்மராழ்வார்களையாம் சைவரென்று கூறினால், அதனை யிவரிகழ்வாகவேயன்றோ கொண்டுவருந்துவர்? இதனையுய்த்துணராமல், முதலியாரைப் புகழ்ந்து கம்பன் காளிகோயிற்பூசகன் என்று நிஜம்பேசிய தாமோதரம்பிள்ளையவர்களை இவர் குறைகூறியது பெருங்கொடுமையேயாம். கம்பன் தன்னோடிகலியவொருவனது குதிரையைச் சுட்டி "மாகாளியம்மேகேள்- குதிரைமாளக் கொண்டுபோ" என்றும், அவ்வெதிரி தன்னைப் பணிந்தபோது "குதிரைமீளக்கொண்டுவா" என்றும் பாடித் தனது குலதெய்வத்தைக் கொண்டாடிய வாய்மையை யிவரறியார்போலும். அன்றியு மிவர் காளியைக் குறைவாகக்கொண்டார். சிவசத்திகளில் சிவனது குரோதசத்தி காளி, அவரது புருஷரூபசத்தி விஷ்ணு. காளியும், விஷ்ணுவும் சிவ சத்திகளேயாக, இவர் காளியை யிகழ்ந்தது விஷ்ணுவையே யிகழ்ந்தபடியாம். கம்பன் காளியாகிய சிவசத்தியையும், இவர் விஷ்ணுவாகிய சிவ சத்தியையும் வந்திப்பவர்களாயின வைபவத்தை இனியாயினுந் தெரிந்துகொண்டு, காளியையும், காளிபூசையையும், காளிபூசகரையும், காளிபூசகரைப் பிரஸ்தாபிப்பவரையுங் குறைந்தமதியாலிகழ்ந்து பரிபவமெய்தாது சுகிப்பாராக. "భోగీభవాన్ [illegible]-

శ్రీధేవకాళీ సమరేచదుర్గః " என்ற பிரமாண வசனத்தையும், " వాసుదేవః పరః ప్రకృతిః " எனவும், " యోనిర్జనార్దనః " எனவும் போந்த சுருதிகளையுங் கவனித்து இன்புறுவாராக. நிற்க.

இவர் மெச்சிய தொழூர் முதலியார் இராமாயணத்தைப் பெரியபுராணம்போன்றது என்று கூறியநுட்ப மிவரறிந்திலர். பெரியபுராணம் சிவனடியார்கள் பெருமையைக் கூறுவது. இராமாயணம் சிவனடியானாகிய இராமன்புகழைக் கூறுவது. பெரிய புராணத்தைப்போல இராமாயணமும் சிவபக்தயரது புகழைக்கூறவந்த பெருமிதமுடையது என்று கொண்டு, அதனைத் தமிழிலவிரித்த தமிழ்க்கவியைக் கொண்டாடிய திவரறிந்திருந்தால், யாவரினுங்கொடியவர் தொழூர் முதலியாரென்று தூற்றிவருந்துவர். இராமனைப் பிரஸ்தாபித்தமையால அவன்றமபிமார் (இலக்குமணன் முதலினோா) சீதை-அநுமான் முதலிய வானரவீரரையுங் கொண்டிடுக. இராமேசுவரத்தில இராமலிங்கம்-இலக்குமணலிங்கம் - சீதாலிங்கம - அநுமலிங்கம் இதயாதிகளைக்கண்டு தெளிக. இராமேசுவர யாத்திரையுடையரா ஊருக்குட் பிரவேசிக்கிறபோதே இலக்குமணன் தீக்ஷைவகித்திருந்த தலைமயிரைச் சிரைத்துக்கொண்ட (சௌளஞ்செய்துகொண்ட) இடத்தில தாங்களுஞ்சங்கற்பங்கூறி சௌளஞ்செய்துகொண்டு, அங்குள்ள இலக்குமணதீர்த்தத்தில ஸ்நானஞ்செய்து ஸந்தி முடித்துக்கொண்டு, அவனங்குப் பிரதிட்டித்திருக்கும் இலக்குமணலிங்கதரிசனத்தை தரிசித்து இஷ்டகாமியார்த்தங்களையடைந்து போவது பிரத்யக்ஷம். அநுமான் காசிக்குச் சென்று இலிங்கங்கொண்டுவருவதற்கு முன்னர் இலக்கினம் அப்பிப்போகாவண்ணம் சீதையினுமசெய்து கொடுக்கப்பட்ட வைகதலிங்கத்தை (மணலிலிங்கத்தை) அவ்வநுமான் பிடுங்கி அப்பாலெறியத்துணிந்து, தனதுவாலை அதிகமாகநீட்டி

அவ்விலிங்கத்தைப் பல சுற்றுகளா னெருக்கிப்பிடித்து இழுத்து அசைக்கிப்பார்த்து அசைக்கமுடியாமல் மேலே கிளம்பி நெடுந்தூரம்பாய்ந்து ஓரிடத்தில் வாலறுந்து இரத்தங்கக்கி வீழ்ந்து பரிபவப்பட்டுத் தெளிந்து, அவ்விடத்தில் தன்போல சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து உய்யும் வகை தேடியதும் பிரத்யக்ஷம். இவைகளையெல்லாம் விசாரிக்கிற ஸாதுக்களுக்கு இவர்களது வைபவங்களைப் பிரகாசப்படுத்த வெழுந்த இராமாயணம் சிவனடியார் திவ்யசரித்திரம் என்று கொள்வதிலோராசங்கையும் ஜநிக்க ஹேதுவில்லாமையால், தொழுவார் முதலியோரது ஹ்ருதயத்தை நமதன்பர் தெளிந்து மகிழ்வாராக. இவரினி யிந்தப் பிரத்யக்ஷங்களைப் பொய்யென்று சாதிக்கமுந்துவர். அப்போது யாம் இராமாயணமே பொய்யென்று கூறுகிறோம். இராமாயணநூல் சொற்கட்டடம், யாம் காட்டிய திருக்கோயில்கள்-பிரதிஷ்டைகள் கற்கட்டடம் இரண்டும் மெய்யென்பதே பிராமாணிகர்களது சம்மதம். இவர் மெச்சிய சமயனுக்குப் பிராணதாரமாய் விளங்கும் வான்மீகத்தில் இராமனும் தியர் சிவஸேவகர் என்பது பஹுளமாய் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது. அவைகளுக்குத் தப்பர்த்தங்கூறிக்கொண்டு நமதன்பர் பட்சியினது இனத்தவர் மனப்பால்குடித்து மாழ்குவர். அதைக் காட்டிலு மிவர் நுழைந்து ஜீவிப்பதற்கு வேறு சந்துவழி கிடையாது. அவ்வாபாசங்களெல்லாம் யாம் முன்னமே வெளிப்படுத்தியிருக்கும் பிரபலநூல்களால் மூலதோஹானியாயின. அவைகளை மீண்டுவிரிக்கிற் பெருகும். நிற்க.

திரிமூர்த்திகளில், பிரமனுக்கு உலகில் கோயில்-குளங்கள்-பூசை-தேர் - திருவிழாக்களில்லை. மாரி - மதுரைவீரன் முதலியோர்க்குள்ள மரியாதையும் பிரமனுக்கில்லாத காரணம் யாது? அவனை நோக்கி அவனது சிவாபராதத்துக்காக ஸ்ரீ சிவபெருமான் (உனக்கு) "பூசையும் கோயிலும் போகவென்றனன்" என்றதனாலறியலாம். இந்தப் பிரமாண அத்தைக் கடக்க முடியாமலேயன்றோ அவனுக்கு ஒரு

பிரதிஷ்டையு மூலகிலில்லாதொழிந்தது? உண்மை நூற்றுணிவின்படிப் பிரமனுக்குக் கோயிற்பிரதிஷ்டைகளொழிந்தவாறுபோல உண்மை நூற்றுணிவின்படிச் சேதுவில இராமனுதியாது சிவ பிரதிஷ்டைகள் நிலைபெறுயின. இராமேசுவராலயத்தைச் சைவர்கள கறபித்துக் கொண்டாரகளென்று இவா கூறுகிறபடிப பிரமனது கோயிலசளை யிவரினததவருலகிற பாபபிச் சைவாகளது கொட்டபடஙகப் பிரமனுக்குக் கோயிலில்லையென்ற அபவாததைமாறறி ஏனோ சிறந்திடககூடாது? இராமேசுவராலபம சறபனையன்று. பிரமனுக்குக கோயிலிலலாமற்போனதுங் கறபனையன்று. யாவும் பிரமாணசித்தமென்றறிக இவ்வுணமை தெளிநதார் தொழூஉ முதலியார வாய்மைகணடு இனபுறுவரென்க, நிற்க.

இவா இலக்கணககொத்துடையாரைப பிரஸ்தாபித்து அவரைச "சைவ வேளாளாககாசிரியா' எனறும், "சைவசமயாசாரியரி லொருவா" எனறும விசேடஙகூறி, அவருக்கு நாராயணாய எனனு மந்திரத்தில ராவும, நமசிவாய என்னு மந்திரத்தில மவ்வுஞசோந்து, ராம மநதிரமாயினது தெரியாமையால் "ஸ்ரீமத் கமபராமாயணததை நளனகதை-அரிச்சநதிரன்கதை என்பனவறறோடு சேர்ததிகழ்ந்து பட்டணததுபபிள்ளை முதலினோபாடலை நனகுததிபபாா" என வொன்று கூறியோய்நதார். இவா தெரியாத விஷயஙகளிலெல்லாந் தலைதுறுத்துக்கொணடவதிப்படுகிறா இலக்கண கொத்துடையார் (சுவாமிநாததேசிகா) சைவவேளாளாக காசிரியரெனபதும், சைவசமயாசாரிய ரெனபதும கேவலம அஸஙகதம. அவரொரு சாம்பவாகரோசா. சைவமஙகலநதழைதத அவரை யாம வந்திப்போம் "சிவனடியாரைச் சிவனென வணஙகு" என்பது பிரமாணம். இவரைச சைவசமயாசாரியா என்று கூறியது சைவஸம்பிரதாயந் தெரியாமையேயாம். இவா சைவசமயாசாரியராயிருந்தால், பட்டினத்தடிகளைத்துதியாா. பட்டினத்தடிகள் இவரின் மிக்கவர். அந்தப் பட்டினத்தடிகளுஞ்

சைவசமயசாரியரி லொருவராகார். பசுநூல்களிற்பயின்று காலங்கடத்து மெதிரிக்குப் பதிநூல்கள் வந்திக்குஞ் சைவ மரபியலுணரப் பெறுமை அதிசயமன்று. நிற்க.

நாராயணாய வென்பது அஷ்டாக்ஷரமன்று. ஓம் நமோ நாராயணாய வென்பது அஷ்டாக்ஷரம். நமசிவாயவெனபது பஞ்சாக்ஷரம். இதுபோல அவர் அஷ்டாக்ஷரத்தை யெழுதிக்காட்டுதெ தெளிவிழந்தனர். ஓம் நமோ நாராயணாய என்பதில் ராவும், 'நமசிவாய' எனபதில மவ்வும "ராம" என்று அமைந்தது என்று விளக்காமல, நாராயணாய என்பதில் 'ரா' ஒழிந்தால் "நாயணாய" என்றும, நமசிவாய என்பதில 'ம' ஒழிந்தால் 'நசிவாய' என்றுய சொரூபங் கெட்டுப் பயன்செய்யாமை போதருமென்றும் இவர் தெரிவித்த விசாரத்துக்கு நாம யாது பரிசளிக்கலாமென்று பெரியோர் யோசிககின்றனர். அஷ்டாக்ஷரத்தி லிரண்டாவதெழுத்தும், பஞ்சாக்ஷரத்தி லிரண்டாவதெழுத்தும 'ராம' என்று வெளியாகியது என்று இவரினத்தவாகூறி மகிழவா. இவ்வாபாசஙகளை இலக்கணக கொத்துககாரர் அறியவில்லை யென்று இவர் பரிதாபபபடடது ஏன்டெனலுயது? அதவா இவர் கூறியதை யொப்புவோம் அதனுல யாது விசேடம? புராணம என்பதில் ராவும, அமரம எனபதில மவ்வுஞ்சேர்ந்து ராமமந்திர முண்டானதாக யாம சொலலுகிறோம். இதைக்காட்டிலும் நமதனபாகூறியதி லுசிதமென்னை? நாராயணவாசகம் விஷ்ணுசொரூபமும, நமசிவாய வாசகம் சிவசொரூபமுமாகையால விஷ்ணுவம்சமும, சிவாம்சமுஞ்சேர்ந்து இராமனுக அவதரித்த வதிசயம் சால்புடைத்தாமெனின், அப்போது இராமனைக் கேவலம் விஷ்ணுவென்றும, இராமமந்திரம் கேவலம் விஷ்ணு மந்திரமென்றும் பூர்வபட்சிகள் கூறுவது கூடாது. அன்றியும், சிவனை குரங்காகப் பிறந்து இராமனைச் சுமந்தானென்று நூலாசிரியர் (இலக்குமணப்பிள்ளை) சாதிப்பதுங்கூடாது.

சிவன் காசியில் இராமமந்திரத்தை ஜபிக்கின்றானென்பதுங் கூடாது. இம்மதத்தினர் கூறுவனவெல்லாம் பொய்யென் பதையேயன்றோ மேலாபாசங்கள் தெரிவிக்கின்றன ? இவ்வுண்மை தெளிந்தவர்கள் இவர் தேடிய ராமநாமவைபவத்தை யெங்ஙனே மதிப்பார்கள்? இவரது ஆபாசஞானம் ஏனோ எம்மவர்க்குண்டாகவில்லை யென்று இவர் பரிதாபப்படுகிறார்? எமக்கு அது வேண்டாம! வேண்டாம!!

இனி இலக்கணக்கொத்துக்காரர் கம்பராமாயணத்தை நளன்கதை - அரிச்சந்திரன கதையோடு சேர்த்து இகழ்ந்தாரென்று இவர் வருந்துகின்றாரன்றோ ? இலக்கணக்கொத்துக் காரர்கல்விக்குமுன் கம்பன்கல்வி எம்மாத்திரம? இலக் கணக்கொத்தே அதனை யாக்கியோர்பெருமையை நிறுத்துமே! பிரபுலிங்கலீலை - காஞ்சிப்புராணம- விநாயகபுராணம் என்பவை கம்பன் பாடல்களைப பழித்துக்கொண்டிருக்கின்றனவே ! கல்வியறிவு மிகுதியுடையார்க்கே யன்றோ இவ்வுண் மை விளங்கும்? இதனால, கம்பனது நூலை இலக்கணக்கொ த்துக்காரர் மதிக்கவில்லை யென்று இவர் வருந்தியது இவரது கல்வியின்குறைவையே காட்டியது. பட்டினத்தடிகள் சிவாநுபூதிப பெருஞ்செலவராகையால, அவரது பாடல் களைத் தாமுய்யுமபொருட்டுத் துதித்து மகிழ்ந்தனர். கம் பன் அநுபூதிமானா? அவனது நூலை யோரிலக்கியமாகச் சிந்தாமணியையபோலச் சைவரும், வைஷ்ணவருங் கொண் டிருக்கின்றார்கள். சைவர்நிறக. வைஷ்ணவர்களாவது அதனைத் தமது பாராயணநூலாகக்கொண்டு அநுஸந்திக் கின்றார்களா? கம்பநாட்டாழவார் என்பதேயன்றி உண் மையாழ்வார் நூல்களை வந்திப்பதுபோல வைஷ்ணவஜனங் கள் வந்திப்பதைக்காட்டிக கம்பனையும், அவனது நூலையும் இவர் பெருமைபடுத்திவாழட்டும். இராமன்புகழ் விரிந்து கிடந்தும், ஆக்கியோனது குறைவைநோக்கியே யன்றோ

சிஷ்டஜனங்கள் கம்பராமாயணத்தைப் பூஜையிலவைத்துப் போற்றுராயினர்? வான்மீகி பகவான்செய்த இராமாயண மேயன்றோ வைஷ்ணவர்களுக்கு மாத்திரமன்றி ஸ்மார்த்தர் மாதவர்களுக்கும் நித்திய பாராயணமாகி அதிக பூஜ்யமாய உலகில் பிரசித்தியடைந்திருக்கின்றன? அநேகம் விஷ்ணு ஸ்தோத்திரங்கள் தமிழிலிருந்தபோதிலும் அவற்றைத் திருவாய்மொழிமுதலியவற்றோடு இவர் ஸாம்யங்கூறுவாரா? கம்பன் பாட்டையாவது ஆழ்வார்கள் பிரபந்தத்தோடு இவரொப்புரைத்து மகிழ்வாரா? இங்ஙனமாக, பட்டினத்தடிகள் பாடலைத்துதித்த இலக்கணக்கொத்துக்காரரை யேசிய நமதன்பர்மதுகைக்கு யாம் அதிக வியசனப்படுகிறோம்.

இனி இவர் நளன்கதை - அரிச்சந்திரன்கதைகளோடு இராமன்கதையென்று சாமானியமாய்க் கூறி யொதுக்கினர் என்று மனஸ்தாபப்பட்டதும் அஸங்கதமாம். நளன்-அரிச்சந்திரன் - இராமன் என்பவர்கள் அரசர்கள். இராமன் தெய்வத்தி னவதாரமாயினும், அவதரித்தபோது நளன் - அரிச்சந்திரன் என்பவர்களைப்போலப் பெண்டையிழந்து காட்டிலுழன்று சோர்ந்தும், அழுதும், பல துன்பங்களைடைந்து வருந்தியகதையை இவர் மறுக்கமுடியுமோ? நளன்கதை நைஷதம். அரிச்சந்திரன்கதை அரிச்சந்திரபுராணம். இராமன்கதை கம்பராமாயணம் இலக்கணக்கொத்துக்காரர் கூறியது தமிழ் நூல்களேயாகையால், யாமாண்டு வான்மீகத்தைச் சுட்டியுரைத்திலமென்க. இலக்கணக்கொத்துக்காரர் அந்த நூல்களை யொன்றுசேர்த்ததற்கு வியசனப்படுகின்ற இவர் பாரதம் சபாபர்வத்தில், யயாதி-நகுஷன-புரூரவன் - மாந்தாதா - சோமன - இராமன்-இலக்குமணன் - பிரதர்த்தன் என்பவர்கள் இயமலோகத்தில் இயமனை யுபாசித்துக் கொண்டிருக்கிறார்களென்று கூறியதற்கு என்னகதிதேடினார்? அளவுக்கதிமாக இராமனையும், கம்பனையும் மதித்தமையினாலேயே இவருக்கு இவ்வளவு கஷ்டம்வந்தது ஸம்

பவித்தது. இனிக் கம்பனொருவன் குறம்பாடிக்கவிராயனேயன்றி வேறில்லை. அவன் நூறுபொன் வாங்கிக்கொண்டு கண்டவர்களைப்பற்றிக் கவிபாடிச் சீவித்துவந்தான். இராமாயணம் பாடியதும் சடையப்ப முதலியாரிடம் கைக்கூலிவாங்கிக்கொண்டேயன்றி வேறில்லை. இவனை யொருகாலத்திலிவனது அகந்தையொழியுமாறு உலகமாதாவாகிய ஔவையார் "எட்டேகாலட்சணமே யெமனேறும்பரியே, மட்டிற்பெரியம்மை வாகனமே - முட்டமுட்டக், கூரையில்லாவீடே குலராமன் றூதுவனே, யாரையடா சொன்னாயது" என்று வைது ஒதுக்கிய திவ்யசரித்திரம் உலகில் அறியாதாரில்லை. அடா அவலட்சணமே! அடா எருமைக்கடாவே! அடா கழுதையே! அடா குட்டிச்சுவரே! அடா குரங்கே! என்று பட்டம்பெற்றொதுங்கிய ஸாமானியகவிஞனைப் பூர்வபட்சி பரிந்துவெளிவந்தது அவருக்குப் பரிவந்தையே யுண்டுபண்ணியதென்க. விரிக்கிற் பெருகும்.

இனிப்பிறர் சைவர்கள் கம்பனைப் பின்னும் இகழ்ந்தவிதத்தை யெடுத்துக்கூறினர் எங்ஙனமெனின், "முந்திய - நாவினாருரையின்படி நான்றமிழ்ப் - பாவினாலிதுணர்த்திய பண்பரோ" என்று அவர் பாடியதுமாத்திரமே யன்றித் தமது வாயில் வந்தவாறே பாடினார். நந்திதேவரவதாரமாகிய அனுமானைச் சிவாவதாரமென்று பாடினார். வான்மீகத்துள்ளே அனுமானைச் சிவாவதாரமென்று யாண்டுங்கூறவில்லை. இஃதொன்றே, கம்பராமாயணத்தில் இதுபோன்ற வேறுபாடுகள் எத்தனையோ வுள்ளன" என்று இகழ்ந்தார்களாம். சைவாகமெடுத்துக் காட்டியது நிஜமாயிருக்குமாயின், அது இகழ்ந்ததாகாது. கம்பன 'முந்தியநாவினாருரை' என்றது வான்மீகத்தை. அதன்படி 'நான்றமிழ்ப்பாவினாலி துணர்த்திய பண்பரோ' என்று கம்பன் கூறினன். இதனால், கம்பன் வான்மீகத்தின்படியே தமிழ் இராமாயணத்தை (கம்பராமாயணத்தை) இயற்றியதாக வெளிப்படுகின்றது. கம்பராமாயணம்

வான்மீகத்தின்படி யிராமல முரணித்தோன்றுமாயின, கம்பன் தான்செய்துகொண்டபிரதிஜ்ஞையைக் கடந்தவனாக விவேகிகளிகழத் தட்டில்லை. கம்பராமாயணம வான்மீகத்தோடு பலவிடங்களில முரணியிருக்கக்கண்டே கம்பன் தனது வாயிலவந்தபடியே பாடினான் என்று சைவர்களிகழ்ந்திருக்கலாம். கம்பனது குற்றத்தை யெடுத்துக்காட்டி, இது குற்றமென்று தெரிவிப்பது அவனை யிகழ்ந்ததாவது யாங்ஙனம்? 'வான்மீகத்துள்ளே அனுமானைச் சிவாவதாரமென்று யாண்டுங் கூறவில்லை' என்று சைவர்கூறியது சத்தியம். வான்மீகத்துள் அநுமான் சிவாவதாரமென்று கூறியிருந்தால், சைவர்கூற்று வெறுங்கூற்றாம். வான்மீகத்துள்ளே அநுமான் சிவாவதாரமென்று காட்டாதவரையில எதிரிகள் போடுங் காரணங்கள் பயனபடமாட்டா. பாரதம அநுமானை நந்திதேவரவதாரமென்று கூறியது சத்தியம். இதனோடு உண்மைநூல்கள் முரணா. பாரதः பஞ்சமோ வேதः॥ என்று சாஸநம்பண்ணப்பட்ட வேற்றத்தையுடையது பாரதம். இந்தப்பாரதம் வியாஸபாரதம், வேறு அனேகபாரதங்களுண்டாயிருப்பினும் அவை பூஜ்யமாகா. இந்தப் பாரதத்தோடு இராமாயணத்தைச்சேர்த்துப் பாரதராமாயணங்கள் என்று உலகந்துதிக்கும். இந்த ராமாயணம் வான்மீக ராமாயணமேயாம், வியாசமுனிவர்-வான்மீகமுனிவர்களாகிய முனிசிரேஷ்டர்களது வாக்குகள் யாண்டும் நாசமபெறா. பாரதத்தில அநுமானை நந்திதேவரென்றும், இராமாயணத்தில சிவனென்றுங் கூறுமாயின், ஒன்றையொன்று விரோதித்தழியும். அப்படிக்கில்லை. இராமாயணத்தில அனுமானை நந்தி அல்லது சிவனென்றுகூறாமல், தேவர்களில ஒருவரது அவதாரமென்றுகூறி, மாருதியென்று யாண்டும் பிரஸ்தாபித்திருக்கின்றது. இந்த மாருதிப்பிரயோகம் பாரதத்திலுஞ் செய்யப்பட்டு நந்தியவதாரம், வாயுவினது அவதாரம் என்று சொல்வதற்கான வாய்மைகளை விளக்கி யிருக்கின்றது. இ

வைகளுக்கு விரோதமாக அநுமானைச் சிவாவதாரம் என்று கம்பன் கூறுவதற்கவகாசமில்லை. இல்லாததொன்றைக் கற்பித்துச் சொன்னமையால், பொய்பேசினான் கம்பனென்று இப்போது யாமு மிகழ்கின்றோம். இதற்கு நூலாசிரியர்தா னென்ன செய்யலாம? முகவுரைக்காரா மூக்குஞ்சோர்ந்து தான் என்னலாபம்? நல்லது பாரதங் கூறியபடியே வான்மீகத்துள் நந்தியையும், மருத்தையும ஏன் படிக்கவில்லையெனின், ஒன்றோடொன்று விரோதிக்குமாறு விஷயங்களைக் கூறுவது மாத்திரமே குற்றமன்றி ஒன்றிற் சொல்லாத விஷயங்களை மற்றொரு நூல் விரித்துரைப்பது குற்றமாகாது. ஒரு நூலிலேயே பூர்வாதத்திற் சொல்லாததை அநுவாதத்திற் சொல்வது வழக்கம். சீதையைப்பற்றிய பூர்வாதப பிரசங்கத்தில அவர் கணையாழி கொண்டிருந்தாரென்று பிரஸ்தாபமில்லை. அநுவாதமாகத் தமது கணையாழியை இலங்கையில் அநுமானிடங் கொடுத்தாரென்று பிரஸ்தாபித்தது குற்றமாகாது. இதனைத் தெளிந்து மகிழ்ந்திடுக. இந்த நியாயப்படி வான்மீகர் சொல்லாத சிவாவதாரத்தைக் கம்பர் விரித்ததாகட்டுமே எனின், வான்மீகரினுங் கம்பன் சிறந்தவனாகவேண்டும். அல்லது ஒத்தவனாகவாவது இருக்கவேண்டும். வான்மீகருக்குமுன்னே கம்பன் ஒரு மசகப் பிராணியாம். அன்றியுமவனது பிரவசனம் வேறு உத்தம நூலோடு விரோதித்தல் கூடாது. பாரதத்தோடு பகைகொண்டொதுங்கியவதனை வான்மீகத்தினது ஹ்ருதயத்தை விரித்தது என்று வாதிப்பது பாரத ராமாயணங்களை இகழ்ந்து பிழைப்பவனுக்கே சிறக்கும். இவ்வாறு வியவஸ்தையுண்டாக விசாரிக்கும் சாதுர்கள் சந்நிதியில் நமதன்பரது முகவுரை முகங்கவிழ்ந்தவுரையா யொதுங்கியதறிக. இவர் நிற்க.

இவருக்குத் துணையாக வேறொருநண்பர் (வை - மு - சடகோபராமாநுஜாசாரி என்பவர்) மற்றொரு முகவுரையெழுதியதில் " இப்புத்தகங்களை ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதா

யத்தி லூக்கமுடையவர்களும பிறசமயிகளும ஒவ்வொருவரும் வாஙகிப்படிதது இவறறிலுள்ள அருமை பெருமைகளையும், விஷய வைலக்ஷணயத்தையும நனகு அறிநது ஆனநதித்து உயவாராயின் மிக நனறுமெனபதே எனது அபிபபிராயம்" எனறு சநதோஷித்தார் இதிலிவா "பிறசமயிகளும" எனறது முக்கியமாயச் சைவரையேயாம். இவா தெரிவித்தவாறு சைவராகிய யாம அநதச சுவடிகளைப பாரததுத் தெளிந்த உணமையை நனகுப பிரகாசபபடுததினோ மாகையால, இதனைக சிதத ஸமாதானததுடன் நமது சுவாமிகள நடுநிலைகோணடுமல பார்த்து இனபுறுமாறு பிரார்ததிதது இமமுகவுரைககாரிருவரும புகழநதோதிய நூலாசிரியா வணமையை இனிச் சிறிதாராய்நதுளமதுணமையை நிறுத்துவாம.

முகவுரையின்பங்சம் முடிந்தது.

---

இனி நூலாசிரியா வண்மையைச் சிறிது யோசிபபாம். இவரது சுவடிகளில், முதறசுவடியினுதியில சம்பராமாயணத்திலிருக்கும் ஆஞசநேய ஸ்தோததிர மெழுதி, அதற்கோ ருரையெழுதி மகிழநதார். பஞசபூதஙகளிலே யொனறாகிய வாயுவினால (புத்திரனாகப) பெறபபட்டவன எனவும, பஞசபூதங்களிலே யொனறாகிய அபபுவெனனுஞ சமுத்திரத்தைத் தாணடினவன எனவும, பஞசபூதஙகளிலே யொனறாகிய ஆகாயமார்ககமாக இலங்கைக்குச சென றவன் எனவும, பஞச பூதஙகளிலே யொன்றாகிய பிருதிவி யென்னும் பூதேவிபெறற சீதையைக் கணடவன எனவும், பஞ்ச பூதங்களிலே யொன்றாகிய அகனியென்னும நெருப்பிட்டுப் பகைவரூரை யெரித்தவன எனவும, அநுமானைப் புகழ்ந்து நமதன்பரெழுதிய வுரை சாலபுடைத்தே. இநத வுரையைச் சாமான்யரு முணர்வாகள். இவ்வாறுரை யெழுதிய பூர்வபட்சியார் அவ்வுரையின் முடிவில், "எனவே வாயுபகவானுக்கு அநுமானாகவந்தோன் யாவனெனில் உருத்திரமூர்

த்தி யென்க" என்று விசேடங்கூறினர். எடுத்துக்கொண்ட பாடலில் சிவனுக்கு இவரிடங் கண்டவிதம் யாங்ஙனம? பாலகாண்டங் கூறுகிறதென்றா. அப்படியானால், அந்த ஸந்தர்ப்பத்தில இவர் சிவனைக் கண்டுபிடித்தது இவரது குரங்குக்கு மாஹாத்மிய முண்டுபண்ணட்டுமே எடுத்துக்கொண்ட பாடலில், தமது கருத்துச் சிவிகையானால "எனவே" என்று நியாயங்கற்பிக்க முந்தலாம். இவருக்குள்ள சிவத்வேஷமேயன்றோ இவரை யிவ்வசம்பாத்த வாதத்திலிழிந்து கேடு சூழ்ந்திடச்செய்தது? நிற்க.

இவர் "வானுளோரனைவரும்" எனனும் பாடலில, விஷ்ணுவானவர் தேவர்களைச் சுட்டி, நீவிர் "வானரங்களாக் கானினும்வரையினுங் கடிதடத்தினுஞ் சேனையோடவதரித்திடுமின்" என்று கூறிய ஸந்தர்ப்பத்தில, "எண்டிச் சேனையென்றது பிரமதகண சிவகணங்களை" என்று விசேடங் கற்பித்தார். இந்தக் கற்பனை கம்பனதன்று அவனது வார்த்தை "சேனை" என்றதே. இந்தப் பூர்வபட்சியார் வீணே பிரமதகண சிவகணங்களை வருவித்துக்கொண்டு அதனைக் கம்பன் றலையிலேற்றி, அவனுக்குப பரிபவமூட்டியது பரிதாபமென்க.

கம்பன் பாரத்வாஜ ராமாயணத்தைத் தழுவி அவ்வாறு தொகுத்துரைத்தானென்றா. அவன தொகுத்ததுமின்றி, விரித்ததுமின்று. இவரே விரித்துக்காட்டினா இவர விரிவு யாவருக்கோ ஒப்பு? இவரினத்தவரிடையில் விரித்துக்கொள்ளட்டுமே. கம்பன் வான்மீகரது தாட்டாமரையைத் தடவி யுய்பவனாகவுமே, அவனது அபிமதமல்லாத பாரத்வாஜரது ஸம்பந்தத்தை இவரொட்டவைப்ப தெங்ஙனே? அதவா பாரத்வாஜரை எடுத்துக்காட்டவந்த பூர்வபட்சியார் "இறைவன் அரனையும், அயனையும் நீவிர் உமது கணங்களோடு வானரங்களாய் அவதரியுங்கோள்" என்று கூறியதாக அம்முனிவர் பிரசங்கித்தாரென்று சொல்லியதை அந்தப்படியே நிறுத்தாமல் "எண்டிச்சேனையென்றது பிரமதகண சிவகணங்களை" என்

றது என்னையோ? சிவனாது சேனைகளைப் பிரஸ்தாபித்த வர் அயன்சேனைகளைப் பிரஸ்தாபியாதவாறென்னை? பாரத்வாஜர்தாமென்னை பிரமதகணம சிவகணம என்று பிரஸ்தாபித்தாரா? பிரமதகணம சிவகணம என்றால சிவனைப்போய் நேரே பிடிக்குமென்று இவாதலை கவிழ்ந்து போகின்றாரெனக. பிரமதகண சிவகணஙகளிலொரு பூததிறைறறனுக்கு முன்னிற்கமாட்டாம லோடுமியலபினா இவரது நாராயணரென்று இவரறிந்திலா போலும. ஒரு சிவபூதம விஷ்ணுவினது சக்காதனதை விழுஙகியபோது அதன் முனனினறு கோணஙகிக் கூததாடி மகிழவிதது அநதச் சககரத்தைப பெற்றுக்கொண்டதும், ஒரு பூதத்தால் சண்டையில் சிகையறுப்புண்டு மானமழிநததும் விஷ்ணுவினது மகிமையென்று இனியேனு மிவரறிந்து அடங்குவாராக,

அன்றியும்,

“ மாயுமாயர்தந்தசங்குசோடிகோடிமருவவே
தீயின்வாயினூர்திதந்தசிஙகநாதமுநதவே
சாயுமென்னில்காலாமேதிநதகொம்பினைசக்கவே
யாயிரங்களிற்றெருத்தணைந்ததேரிலேறினன்.”

என்னும பாடலால பிரமதகணங்கலெவ்வியல்பின வென்று விவேகிகளறிவாாகள். இறந்திறந்து பிறக்கின்ற அநேககோடி விஷ்ணுக்களுடைய கையிலிருக்கிற சங்குகளை அநேகபூதங்கள் வாயிலவைத்து ஊதிவரவும, இறந்துபோன அக்னியும் - வாயுவும எண்ணிறந்தவாக ளேறுகின்ற ஆட்டுக்கடா - கலைமான் இவைகளுடைய கொம்புகளை வாயிலவைத்து அநேகபூதங்களூதிவரவும், இறந்துபோன எமதர்மராஜர்களேறிவரும் எருமைக்கடாக்களுடைய கொம்புகளை வாயில்வைத்து அநேகபூதங்களூதிவரவும ஆயிரயானைகள்கட்டிய தேரின்மேலேறினர் வீரபத்திரர் என்று பெறப்பட்டவாய்மை யுணர்ந்தவர்கள் பிரமதகணங்கள் குரங்குகளாகத் தோன்றி இராமனுக்கு ஊழியஞ்செய்தனவென்று கூறிய

பூர்வபட்சியினது மதுகைக்கு வியசனப்படாமலிராரென்க. எத்தனையோ விஷ்ணுக்கள்-எத்தனையோ பிரமர்கள் - எத்தனையோ அக்னி - எத்தனையோ வாயு - எத்தனையோ எமதர்மராஜர்கள்காலங்களையுண்டு ஏப்பமிட்டு என்று மழியாநிலைமையெய்திச் சிவபரஞ்சுடரை வந்தித்துக்கொண்டு ஊழியஞ்செய்தொழுகும் பிரமதகண சிவகணங்களிலொன்றின் முன்னிலைபெறுதடங்கும அற்பவறிவும், அற்பவாற்றலும், அற்பவாயுளுமுடைய அநேக விஷ்ணுக்களில ஒருவிஷ்ணுவினது அவதாரமென்று கூறும் மனுஷ்யனுகிய இராமனுக்கு அளவுகடந்தமகிமை இவர் கற்பிதத்துரைத்தது கள்ளிக்கொம்புக்கு வெளளிப்பூண கட்டியதுபோலாம். நிற்க.

இவர் "பலவுமிதின்றுமெலாரு அவிழ்தட்டாதா" என்பதற்கிணங்க இரணடொரு பாடல்களை எழுதிக்கொண்டு "வானுளோர் - வானுளீர்" என்று வருவித்துப் பரிசோதனையிலிறங்கினா. சிவனை நேரே காடட வகையிலலாமல அச்சிவன் இதோ வானுளோரில் புகுந்திருக்கின்ருன். அதோவானுளீரில் புகுந்திருக்கின்ருன் என்று சொற்சமு பிரமங்காட்டியனுத்தாரிதென்கொலோ? அஸத்தாகியவதனையுபேகைக்ஷ செய்தாமென்க. நிற்க.

"வாயுமற்றெனதுகூறுமாருதியென்னுமறவோர்
காயுமாககடகைளாகிக்காஸினியதனின மீது
போயிடத்துணிந்தோமென்ருபுராரிமற்றியானேவாத
சேயெனப்புகன்ருனமற்றைத்திசையுளோர்க்கவதியுண்டோ."

என்ற பாடலை எடுத்துரைத்து, இதில வாயுபகவான் எனது அமிசம் மாருதி என்று கூறினுனெனவும், புராரியாகிய சிவன் யானேவாதசேயெனக் கூறினுனெனவும் போந்த பகுதிகளை யெமக்குக்காட்டி நமதன்பர் சந்தோஷித்தார். இவரது சந்தோஷம் அளவுக்கதிகமாக (அதட்டிக் கேட்பாரில்லாத வரையில்) ஓடுகின்றது. எங்ஙனமெனின், "உருத்திரமூர்த்தியே தனது பூரணுமிசத்தோடு வாயுவை யதிட்டித்து நின்று

அவற்குப்புத்திரனாக தோன்றலின் இன்னதேவா கூறென்று கூறாமல் வாளாவாயுகுமாரன் என்றார்" என்று பொங்கிவழிந்ததே இவரது சந்தோஷம். இதனைச் சிறிது விசாரிப்போம். வாயுவின்கூறு மாருதி யெனறபோது மாருதியென்பவன் யாவன்? புராரியாகிய சிவன வாதசேய என்றபோது வாதசேய் என்பவன் யாவன்? மாருதி=மருத்துவின்மகன். வாதசேய்=வாயுவின்மகன். வாயு-மாருதம்-மருத்து-வாதம என்பன பரியாயப்பெயாகள். இதனால், மாருதியெனறதும்,வாதசேய் என்றதும் ஒரு விஷயத்தையே தெரிவித்ததாகின்றது. இதனைக் கூறியது கூறலென்னுங் குற்றமாகவன்றோ வொது க்குவர் அறிஞர்? சங்கரனை வாயுவோடுசோததது விசேடமெனின், அப்போது சங்கரனமிசமும், வாயுவி னமிசமுஞ் சேர்ந்து பிறந்தவனாகவேணடும அநுமான் இவவாறு பரிகாரந்தேடத்தக்க நமதன்பா "உருத்திரமூர்த்தியே தனது பூரணாமிசத்தோடு தோனறலின" எனறது எனனே? உருத்திரமூர்த்தியினது பூரணாமிசம வாயுவினது அலபாமிசம் கூடிபபிறந்த அநுமானது அவதாரரஹஸ்யத்தை இன்று இவர் வெளியிட்டது இவருமொரு அவதாரபுருஷரென்பதையே வெளிப்படுத்தியது. இவரது அவதாராமிசம அவ்வநுமானதாயிருக்கலாமென்று புகழுவது உசிதமாம. இவ்வவதாரசிரோமணியார "பூரணாமிசம' என்று கூறியதற்குப பொருளென்னே? பூரணத்துவ பல அமிசங்களடங்கும. அவற்றுள் ஒருகூறை யெடுத்துரைப்பின, அது அமிசாவதாரமாகலாம். பூரணத்தை அமிசமெனறிடலயாஙஙனம? நமதன்பர் "பூரணாமிசம்" என்றமையால ஆசங்கைநிகழ்ந்ததென்க. இனி இவர் கூறவேண்டியது பூரணாவதாரம என்பதாம். இவ்வளவு யூகித்தெழுத வறியாதவா சிவதூஷணைபிலிறங்கியது சால வியப்புடைத்தே.

இனிச் சிவனாரது பூரணாவதாரத்தோடு வாயுவினமிச மெவ்வளவுகூடியது? முந்திரியா? அரைக்காணியா?

வீசமா? காலா? அரையா? முக்காலா? அது தெரிந்தால் அநுமானை ஒன்றுக்குமேல ஒன்றேகாலமிசம்-ஒன்றே முக்காலமிசம் என்பனவாதி யெண்களிலொன்றிற் சேர்த்துப் பூர்வபக்ஷியாரது இனத்தவர் வந்திக்கலாம். இவ்வ ஸம்பாவிதங்களுக்குக் கதி கூறவேண்டிய பொறுப்பு நமதன்பர் தலையில விடிந்தமையால, சிவனைப் பூரணமிசமென்று கூறுவதொழிந்து வாயுவினமிசமும், சங்கரனது அமிசமுங் கூடி அநுமான் பிறந்தானென்று கூறுவதடுக்கும. இவர் கருத்து அப்படிக்குமில்லை, மாருதி-மருத்துவின் சேய். இந்த மருத்துவின சேய் மாருதியென்று பேர்கொண்டது மருத்துவின் மகனென்றது பற்றியேயன்றி மருத்துவினமிசமென்றது பற்றியன்று என்னாத தமது கருத்தை விளக்கவறியாது குழப்பினர். இதனை இன்னும் யாம் விளக்கிக்காட்டுகிறோம். தாசரதி=தசரதன் சேய் இந்தத் தசரதன சேய் தாசரதியென்று பேர்கொண்டது தசரதன மகனென்பது பற்றியேயன்றித் தசரதனது அமிசமென்றது பற்றியன்று. இவ்வுபமானத்தை யின்னுஞ் சீர்தூக்குவாம் தாசரதி தசரதனது அமிசமாகாமல நாராயணனது அமிசமாயினது எப்படியோ அப்படியே மாருதி மருத்துவினது அமிசமாகாமல் உருத்திரனது அமிசமாயினது சித்தமென்று தெரிவிப்பது ஆவசியகமாம். இப்படி அவர் தெரிவிப்பாராயின, உருத்திரன் அநுமானாகப்பிறந்தானென்று சாதித்ததொருவாறு பொருந்தும். முற்றும் பொருந்தாது ஏனெனில, இராமகிருஷ்ணாதியவதாரங்களில் இராமன் விஷ்ணுவினது அமிசாவதாரமென்றும - கிருஷ்ணன் பூர்ணாவதாரமென்றும, இராமன கிஞ்சிஜ்ஞன - கிருஷ்ணன சர்வஜ்ஞனென்றும வைஷ்ணவ புங்கவர்கள் கூறுவார்கள், நமதன்பரோ இராமன் விஷ்ணுவினது அமிசாவதாரமானபடி அநுமானும உருத்திரனது அமிசாவதாரமென்று கூறாமல அவனைப் பூரணமிசமென்று புனைந்துரைத்தனர். வான்மீகியோ இராமனைத் தசரதன் சேய், விஷ்ணுவினது அவதாரம் என்றுகூறினர். இது

ஸர்வஸம்பிரதிபந்நமாய் வழங்குகின்றது. இந்தப்பிரகாரம் (அநுமான் மருத்துவின்சேய, உருத்திரனது அவதாரம் என்று)வான்மீகிபகவான் கூறியதில்லை. இராமனவதாரத்தை விளங்கக்கூறிய முனிச்சிரேஷ்டர் அவ்விராமனதுயிர்க்காவலுக் குறைவிடமாய் விளங்கிய அநுமானது அவதாரத்தை விளங்கக் கூறாதுவிடுவாரா. உருத்திரனது அவதாரம் அநுமானென்பது அவ்வநுமானுக் கப்பெரியதொருமகிமையாம். அதனை அம்முனிவர் கூறாதொழிவாரா? அது உண்மையாயிருந்தால் அவசியம் கூறியேயிருப்பர். அதனை யவர் கூறாமையால், பூர்வபட்சிகள் கற்பனையென் றொதுக்குவதே உசிதமென்றறிக.

இவ்வாறு முடிவதறியாது இவர் "உருத்திரமூர்த்தியே தனது பூரணாம்சத்தோடு வாயுவை அதிட்டித்து நின்று அவற்குப் புத்திரனாகத் தோன்றலின் இன்ன தேவர் கூறென்று கூறாது வாளாவாயுகுமாரன் என்றார்" என்று வரைந்தது என்னமதியோ? ஈண்டிவர் உருத்திரமூர்த்தியினது பூர்ணாம்சத்தைக் கண்டுபிடித்துப் பிரசங்கித்ததற்கு மாறாக "இன்ன தேவர் கூறென்று கூறாது வாளாவாயுகுமாரன் என்றார்" என்றது என்னை? சிவனது பூர்ணாம்சம் என்று தெரிந்து கொண்டதை அவ்வாறே தெரிவிக்க யாது தடை? தான் தெரிந்துகொண்டதைத் தெரிவியாமல "வாளாவாயுகுமாரன்" என்றாரென்றது தெளிவின்மை யாகாது கொலலோ? ஆண்டு "வாயுகுமாரன்" என்றதேயன்றிச் சிவனாரது பெயர் பிரஸ்தாபிக்கப்படாமையால, சிவனார் குரங்காக வந்தார் என்றது வெறுங்கூற்றாயினதறிக. இவர் மெச்சிய கவிச்சக்ரவர்த்தியாரும் இவரது வியாக்கியானத்தைத்தொடர்ந்து பிரசங்கித்தவரல்லர் என்பதும் துணியப்பட்டவாறறிக. இனி இவர் காட்டிய கம்பன் பாடலில் "புராரி மற்றியானே வாதசேயெனப்புகன்றான்" எனக் காணப்படுவது பாஞ்சராத்திரிகளது கற்பனையேயாம். கம்பன் தனக்கு முதனூலாகப்பிரதிஞ்ஞை செய்துகொண்ட வான்மீகத்தில்லாத புராரியைத்

தான் கூறினான என்பது அஸங்கதமாகாது கொல்லோ? கம்பன்பாட்டிலுள்ள புராரியைப் பாஞ்சராத்திரிகளது கற்பனையென்றொதுக்குவோமானால் அவனது பிரதிஜ்ஞையும் புகழும் நிலைக்கும்! நிலைக்கும்!! கம்பனைப் புகழ்வதுபோலப் பூர்வபக்ஷியும், அவரினத்தவரும் (ஒரு அபவாதத்தை அவன் தலைமேற் சுமத்தி) வீணே இகழேற்கச், செய்தது பரிதாபமெனக.

இனி அந்தப்பாட்டில், மூன்றாவது நான்காவது அடிகள் "போயிடத் துணிந்தோ மென்று புகன்றமற்றி யாருமெய்தா, மெய்ப்பெருவகை கொண்டார் வேறினிவிளம்ப லுண்டோ" என்றிருப்பதே அமைவுடைத்தாம். இதனை எமது கற்பனையென்று பூர்வபக்ஷி கூறலாம். எந்தக் கற்பனை கம்பன் தலையிடறச் செய்யுமோ, அதுவே தள்ளத்தக்கது. கம்பன் கூறிய உண்மையான பாடம் நெடுநாளைக்கு முன்னர் மாண்டுவிட்டமையால், அதனோடு மாறுபடாது யாம் ஈண்டுக் கூறியது குறை கூறப்படமாட்டாதென்க. கம்பன் புகழை விரித்தயாம் அவனது இகழைத்தெரித்த இவரை யொருபொருளாக மதியேம்! மதியேம்!!

இனி நமதன்பர் "அருட்டரு கமலக்கண்ண னருண்முறை யலருளோனும், இருட்டருமிடற்றினோனு மமரருமினையராகி, மருட்டரு வனத்தின மண்ணின்வானர ராகிவந்தார்" என்றொரு பாடலை எழுதி, அதில் "இருட்டருமிடற்றினோன்" என்றுள்ள பாடத்தால் சிவனைக் குரங்காக்கப் பார்க்கிறார். இதுவும் வான்மீகத்தோடு முரணுதலால், கம்பனது பிரதிஜ்ஞையையுதைத்துத் தள்ளுகிறதென்க. அதனால், "அருட்டரு கமலக்கண்ண னருண்முறை யலருளோனும், இருட்டருமுளத்தினீங்கு மமரருமினையராகி, மருட்டரு வனத்தின் மண்ணின் வானரராகி வந்தார்" என்று பாடபேதங்கொண்டு கம்பன் புகழை நிறுத்துவதே உசிதமென்றறிக. விரிக்கிற்பெருகும்.

இனி இவர் "சங்கோத்தரம்" என்று சிலவரைந்தார். அதனையுஞ் சிறிது யோசிப்பாம்.

## பூர்வபட்சம்

வான்மீகத்துக்கு வியாக்கியானஞ் செய்தவர்களில் ஒருவர் (சங்கரன் அரக்கர்க்கு முனைவரங் கொடுத்தமையால் பின்பு அவர்க்கு விரோதமாகத் தனது அமிசத்தால் ஒருவரையுந் தந்திலர் என்று) கூறினர். இந்த வான்மீகத்துக்குக் கோவிந்தராஜீயம், வீரராகவீயம், வான்மீகராகசியம், சிவதீர்த்தீயம், அப்பையதீக்ஷிதீயம் முதலிய பல வியாக்யானங்களிருக்கின்றன. இவ்வியாக்யான கர்த்தாக்களுள் ஒருவரது சொந்த அபிப்பிராயத்தையே கொண்டு அநுமான் உருத்திராம்சமல்லவென்று கொள்வது வழியுடைத்தன்று. வீரராகவீயமுதலியவற்றுள் சிவனது பூர்ணாமிசமே அநுமான் என்று கூறப்பட்டுள்ளது

## சித்தாந்தம்.

இவர் அநேக வியாக்யானங்கள் பேரைப் பிரஸ்தாபித்து, அவற்றுளொன்று தமக்கு அநுகூலஞ் செய்யாமையைத் தெரிவித்தொதுக்கினர். அந்த வியாக்யாதாவின் பெயரைப் பிரஸ்தாபியா தொழிந்தார். அந்த வியாக்யாதா சிவன் குரங்காய், அல்லது வேறுவடிவாய்ப் பிறவாமைக்கு ஒருகதி கூறியதாக ஏற்பட்டது. இவர் மெச்சிய ஏனை வியாக்யாதாக்கள் சிவனைக் குரங்கு என்று என்ன நியாயங் கூறிச் சாதித்தார்கள்? வெறுமனே சிவன் குரங்கு என்று கூறிவிட்டதனால், நமதன்பருக்கு அவர்கள் சகோதரராயினார்கள். எத்தனை வியாக்யாதாக்கள் கும்புகூடியழுதாலும் வான்மீகத்தில் வசனங்காட்ட வகையில்லாதவரேயாயினர். இவர்களைத் தமக்கனுகூலமாகத் தேடிய நண்பர் ஒவ்வொரு வியாக்யானத்தையுமுதகரித்து அவர்களது வாய்மையை வெளிப்படுத்த வேண்டும். வெறுமனே அவர்கள் பேரையெழுதிவிட்டதினாலேயே அவர்கள் சிவதூஷணஞ் செய்தார்களென்கிற உபசித்தாந்தம் தலைதூக்காது. ஒன்று காட்டுகிறோம். அப்பையதீக்ஷிதீயம் ஸ்ரீமத் அப்பையதீக்ஷிதஸ்வாமிகள் செய்ததாயிருக்கலாம். அவர் சதுரதிகசதப்பிரபந்தகர்த்தா வென்று விருதுபெற்று

வேதாந்ததேசிகனது நூல்களை வெட்டிச்சாய்த்துத் தாசரதியை யொருமனுஷ்ய னென்று ஸ்தாபித்துச் சைவமங்கலந் தழைக்கச்செய்தவர் இவர் சிவனைகுரங்கு என்று சாதிப்பாரா? வீரராகவன - கோவிந்தராஜன முதலிய சில பேயமதியினர் கூறியது வாஸ்தவம வானமீகததை மூலமாகக் கொள்ளாத அவை எமக்கு வெகு துச்சமாம.

இனி நமதனபர் தமசகு வேண்டாதவராகவொதுக்கிய வியாக்யாதா கூறியதும சரியன்று தாமகொடுத்தவரம் பங்கமடைதற கேதுவான அவதாரமெடுததிலர் சிவனென்பது உசிதமாயினும, தாம கொடுத்த வரத்தை யழிககவவதரிக்கு மேனேயோரைத் தடுக்காதது அவரபார பெருங்குறைவாம். எல்லாத்தேவர்களும தமகதுக குறைநதவர்களை யாகையா ல அவர்களைத் தடுபபது கஷ்டமன்றுட. சிவன பிறகக விசைநதிலரெனறதனுல், சிவனேயும் பூமியிற பிறகக விஷ்ணு வி திததாரெனனும பட்சததை அந்த வியாகயாதா வொபபில ரெனறு ஏறபடுகின்றது. ஒபபினுரெனின, அந்த ஆஜ்ஞையை பபொருள்படுத்த விலலையெனறு கொணடதாகத துணியபபடுகின்றது அநத வியாக்யாதா சிவாபிமானி யென்பது மட்டிலெமக் கங்கீகாரம் அதனுல், அவருககு நமஸ்காரம பண்ணுகிறோம நமது பூர்வபட்சியார் தேடிய வீரராகவீயத்தில சிவனது பூரணமிசம அநுமானெனறு கூறியதாக நமதனபர் காட்டினுரன்றே ? பூரணவதாரம எனபதேயன்றிப பூரணமிசமெனல அஸங்கதமெனறு மேலே நமதன்பருக்குப புகட்டியபுத்தியே வீரராகவனுககும் சிறககும்.

## பூர்வபட்சம்.

வான்மீகம் உததர காண்டததில, இராவணனை நந்திதேவர் பாரத்து என்னை நீகுரங்கு எனறு இகழ்ந்தமையால் எனது அமிசத்தா லொரு குரஙகும எனக்குச் சமானமான பல குரங்குகளுந் தோனறி உன்னையழிக்கும என்று சபித்ததாகச் சொலலபபட்டிருக்கிறது. இந்த நந்திக்கு அபர

சம்பு என்று பெயர். இதனால், நந்தியை சிவன் என்று உப சார வழக்காற் கூறலாம் இவ்வாறு தெளிந்தயாம "புராரி மற்றியானே வாதசெய்" என்று கம்பன் கூறியதை நந்தி பர மாகச் சாதிப்போம். புராரி அல்லது அபரசபு என்று கொள்வதிழுக் கன்மையால், புராரி என்றது உமாகாந்தனைச் சென்று சேராது என்று சைவர் சமாதானங் கூறுவர். அது கூடாது. கம்பர்கூறிய "புராரி" என்னுஞ் சொல்லுக்கு அவ ராவது, பிறராவது அந்தச்சொல்லை யடுத்த முன்பின சந்தா ப்பங்களில் ஒரு இடத்திலேனும் நந்தியென்று கொள்ள இ டந்தராமையால எதிரிகள் தொடுக்கு முபசாரவழக்கு யா ண்டும் பயனசெய்யாது.

## சித்தாந்தம்.

வான்மீகிபகவான் சிவனது பூரணாவதாரம அநுமான் என்று குப்தமாகக் கூறிபதையே கம்பன் வெளிபபடையா கக் கூறினுன் என்று வாதாரபபத்தில் நகைமுகங் காட் டிய நண்பா உத்தரகாணடத்தில நந்தியமிசம் அநுமான் என்று இபபோது கணடதற்கு யாது சமாதானங் கூறு வர்? உத்தரகாண்டத்திற கணட வியக்தவாததத்தின முன் னர்ப பூர்வபட்சியினது குபதவாதம் அஸத்தா யழிந்த தறக. இனி நந்திதேவர் எனது அமிசத்தாலொரு குரஙகும, எனக்குச் சமானமான பல குரங்குகளுந்தோன்றி உன்னை யழிக்கும் என்று, இராவணனைப்பார்ததுச் சொன் னதாக வெளிப்படுததினவர் வான்மீகி பகவான். இந்த நந்தியவதாரத்தை ஏனைய தேவாகளது குரஙகவதாரங்க ளோடு சேர்த்து ஏனோ அமமுனிபுங்கவா படிக்கவில்லை? இந்தக் கூட்டத்தில் அவரைச் சேர்த்தால, அவரும் விஷ்ணுவினது ஆஜ்ஞையால் பூமியில் குரங்காக வந்தா ரென்று கொள்ளவரும. விஷ்ணுவினது ஆஜ்ஞையால் நந்தி குரங்காகவரவில்லை. சிவனுங் குரங்காக வரவில்லை நந்தியையே அமிசாவதாரம்என்று கூறியமுனிவா சிவபரனு

சுடர் பூரணாவதாரமாய் அநுமகோலங் கொண்டாரென்று சொலலத்துணிவாரா? விஷ்ணுவானவர் தேவர்களைநோக்கி நீஙகள் பூமியிற குரங்குகளாய்ப் பவிக்கக் கடவீர்க ளென்று விதித்தது வாஸ்தவம. நந்தியெமபெருமானை இராவணன் குரங்கென்று தூஷித்ததை யநுஸரிதது குரங் கினாலே நீயழியககடவாய். எமது அமிசததாலொருகுரங குமு, எனககுச சமானமான பல குரங்குகளும வரபபோ வதைக் கண்டுகொளளௌன்று சபிததது சததியம. இந்தச சாப வாக்கியததையே விஷ்ணுவினது அநுகாரூற வாக் கியம (தேவர்களை யேவிய விதிவாக்கியம்) பின்றொடர்ந்து ஜீவிககின்றது. தனதமிசததா லொருகுரங்குமு, தனக்குச சமானமான பல குரஙகுகளு மினிபிறக்கப போவதைத் தெரிந்துரைத்தமையால அவை யிவை யிவை யென்று ஒருமுகுணர்ந்து சொன்னாரென்றே இனிது விளஙகுகின்ற து. இன்னு மிதைவிரிபபின், தாம அநுமானாக அமிசத் தால் வரவிசைந்ததுபோலப் இனனின்ன தேவாகள் இன்னின்ன குரஙகுகளாக வரக்கடவாகளென்று சங கற்பித்து, அநதச சஙகறபத்தையே இராவணனிடஞ சொன்னாரென்று துணிந்திடுவர் மேலோர். தாம வர விசைந்ததறகுத் தமதிசசையே காரணம. அவரை யே வினவ வொருவரு மிலா. தாம வருதற்குத் தமதிசசை காரணமாய் நின்றதுபோலப பிற தேவர்கள் பிறததறகும அந்த இசசையே காரணமாய் நினறதெனல அமைவு டைத்து. இந்த இசசை அலலது சங்கற்பமே விஷ்ணு வையதிட்டித்துத தேவாகளைப் பேர்வாரியாக விளித்துக் குரங்குகளாகப பிறககச செய்ததென்றறிக. விஷ்ணு வுக்கே ஸ்வாதந்திரியங்கூற வேண்டுமாயின், உத்தரகாண் டத்தி லெழுந்த பிரசங்கம் கூடாது. எல்லாத் தேவர்க ளையு மேவியகதை கூறவந்தபாலகாண்டம் விஷ்ணுமூர்த்தி சுந்தியையும் ஏவினார் சிவனையும் ஏவினார் என்று பிரசங் கித்திடின், அவரது கௌரவம குறைந்திடும். அஙஙனமின்

மையாலும் பாலகாண்டத்தின் மூலமாக உத்தரகாண்டம் நிலைத்தலாலும் நந்தி யாஜ்ஞையின்படி விஷ்ணுவொழு கினு ரென்பதே சித்தமாயிற்று. விஷ்ணுவுக்கு மேலான வரா நந்தியென்று ஆசங்கையெழுப்பலாம். நந்திபகவான் சிவனுரதுவாகனம். விஷ்ணுவும் அவரதுவாகனம நந்தி மாடாய்ச்சுமப்பதுபோல விஷ்ணுவும மாடாய்சுமந்தனர் சிவனை. இரண்டு மாடுகளில் நந்தி பெரியமாடு; விஷ்ணு சின்னமாடு அல்லது சிறியமாடு. சிறியமாடடினும பெரிய மாடு கௌரவமுடையதென்பதைச சொல்லவுமவேண்டு மோ? மாட்டுக்குக் கீழேகிடந்து புரண்டு சுகித்தலியற் கை. இது விஷ்ணுமூர்த்திக்குச் சொநதமென லறியாதா ரில்லை. இன்னும விரிக்கிற் பெருகும.

நந்திக்கே ஸர்வஸ்வாதந்தரியத்வங் கூறுவதாயின விஷ்ணுமூர்த்தி இராமனுய்ப் பிறந்து இராவணனை யழித்த தறகு யாதுகதியெனின், நன்று கடாயினுய. இராவணனை இராமன் அழித்ததேயிலலை. "ஸ்ரீராமர் இராவணனை ஸம ஹரிக்குஞ் சமயததில் உருத்திராமிசமாயுள்ள ரூபததைத தரித தார்" என்று இராமாயணங கூறுகின்றது. இதனுல் இராவணவதத்திறகு விஷ்ணுவினது பிரவாதத்கம, இரா மனது ஸேவகத்வ முதலியன வியாஜஙகளாயின. இநத வியாஜகர்ததாக்களை நந்திபகவான இராவணனிடம பி ரஸ்தாபியாதது குற்றமாயினதின்று. நந்திபகவான் பிரஸ தாபியாத காடிமூர்த்தி யொருவர் வநததுபோல மனுஷ் யமூர்த்தி யொருவரும் (இராமரும்) வநதிருககடடுமே. இராமா விஷ்ணு வென்பது நிராடமபகம. இநத விஷ்ணு வினது அவதாரத்தையும் நந்திபகவான பிரஸ்தாபிததா ரென்று கூறினும் ஒருவாறு பொருந்தும. எஙஙனமெனி ன், "எனக்குச் சமானமானவர்கள்" என்று சுட்டியவருள், விஷ்ணுவும அடஙகுவர். சமானராகிதராகிய நந்திபகவான் சமானர்களை யொப்பியது யாஙஙனமெனின், சிவபரஞ் சுடர் ஸந்நிதியின்மாத்திரமே அவர்ஸேவகர். மற்றவர்க்கு

ஸேவயா. ஆயினும் விஷ்ணுவுக்குந் தமக்கு மாத்திரம் ஸமானத்வம் எப்போது முண்டு. அதற்கு இருவருஞ் சிவபரஞ்சுடரைத் தாங்குதலும், விருஷபாக்ருதியாய் இடத்தலுமே சான்று. விஷ்ணுவை ஸமானரென்றது ஒருவாறு பொருந்தியது. ஏனைய தேவர்களையும "எனக்குச் சமானமானவர்கள்" என்றது பாதிக்கிற தெனின், அதுவும் பாதிகாது. என்னைப்போலவே பிரமன் இந்திரன்முதலிய பிறதேவர்களும் சிவபுருக்யர்களாய் கிடந்தூழியஞ் செய்தல் சத்தியமாதலால் என்ற கருத்துக்கொண்டு கூறினுரென்றல் பொருந்தும். இவ்வாறு பாகுபாடு செய்துணரும் விவேகிகளஸதஸில் பூர்வபட்சியாரது வாதம் எங்ஙனே பயன்படும்? ஸ்ரீகைலாஸகிரியை யசைத்துக் கேடெய்திய சிவாபராதங் காரணமாக நந்திபகவானாற் கோபிக்கப்பட்டுச் சாபமேற்று இராவணனழிந்தமையே முடிவாகத்தோதலுணர்தலின்றிக் குரங்குகள்காலைக் கட்டிக்கொண்டு கூக்குரலிட்டழுதுய்ந்த இராமனது மகிமையைப் பிரஸங்கித்துக் கம்பீரம்பேசிய பூர்வபட்சிக்கு இன்னுஞ் சிறிதுரைப்பாம்.

நந்திபகவான் எனது அமிசத்தா லொருகுரங்கு பிறக்குமென்று சொன்னதை நான் எனது அமிசத்தா லொருகுரங்காய் அவதரிப்பேன் என்று சொல்லலாகாதா? எனது அமிசம் என்று தமது சம்பந்தங்காட்டினும், அவ்வமிசாவதாரக் குரங்கைப் படர்க்கையிடத்ததாகப் பிரஸ்தாபித்தமையால், தனது முழுஸம்பந்தம் நிலைபெறவில்லை. இதனால், நந்தியமிசம் அநுமான் என்று பிரசங்கித்துமயங்குவதுந் தவறுடைத்தாம். இனி அதற்குப் பொருளென்னையெனின், இருடியமிசமில்லாதவனுக்குக் காவியஞ் செய்யுந்தன்மையும், விஷ்ணுவமிசமில்லாதவனுக்கு உலகாளுந்தன்மையும் (பிருதிவீ பதித்வமும்), தேவாமிசம் (தேவராஜனாகிய இந்திராமிசம்) இல்லாதவனுக்கு அன்னத்தைப் பெருக்குந்தன்மையும் (அன்னதானஞ்செய்யும்

அருளுடைமையும், உருத்திராம்சமில்லாதவனுக்குவேதா த்யயனப்பிராப்தியும சித்திக்கமாட்டாவென்று நூலகள் கூறுகின்றன. இதற்கு "நாருத்ர꞉ குருதே ராஜ்யம் நாவிஷ்ணு꞉ ப்ருதிவீபதி꞉। நாதேவாம்ஶோ ததாத்யந்நம் நாருத்ர꞉ [illegible]" எனனும வசனம் சான்றும. வேதம் படித்த பார்ப்பாரெல்லாம சிவனும, பூமியாளும அரசனெல்லாம விஷ்ணுவும என்று துணியவேண்டியது மரபோ? சிவாநுக்ரக மில்லாதபோது ஒருவனுக்கு வேதாத்யயனப்பிராப்தியும், விஷ்ணுவநுக்ரக மிலலாதபோது ராஜ்யாதிகாரபபிராப்தியும ஸித்திக்க மாட்டாவென்று பொருள் கொள்வதே ஸர்வஸமப்ரதிபந்நமான உசிதார்த்தமாம. இவ்வாறு கொளளுங்கால், நந்தி எனதம்சத்தா லொருகுரங்கு பிறக்கு மென்றது எனது அநுக்ரகத்தா லொருகுரங்கு பிறக்கும் என்று பிரஸ்தாபித்தபடியாம. எனக்குச் சமானமானவர்களென்று பிரஸ்தாபிக்கப்படடவரினும், எனது அநுக்ரகம்பெற்று வருபவன விசேடமுடையவன் என்றுஞ் சூசித்தபடியாம். ஏனைய குரங்குகளும் நந்தியநுக்ரகம பெறினும், அநுமான் பெற்ற வநுக்ரகம மிகு விசேடமாம். ஒரு அரசனது தலைமையை அவனது ஏவலாளர்கள பெற்றிருப்பது சத்தியமேனும், அவருள, மந்திரியடைந்த அநுக்ரகம் உசிதத்தினுமுசிதமாமன்றே? இவ்வாறு தெளிந்து ஏனைய குரஙகுகளையும், அநுமானையுங கொண்டாடுவா விவேகிகளென்றறிக. உருத்திரர்களில, ஸ்தாணுருத்ரர் விசாலாட்சருத்ரர் ஸ்ரீகண்டருத்ரர் முதலிய அனேகருளர். சதருத்ரர் சஹஸ்ரருத்ரர் என்று சேட்கப்படும் உருத்திர பேதங்களையு மறிந்திவர் மேலோர். இவருளொருவரே அநுமானாய் வநதவரென்றறிக. சிவபுண்ணிய மேலீட்டினாலே ருத்ரஸாம்ய மெய்தியவர்களெல்லாம உருத்திரர்களென்று படிக்கப்படுதலும், திரிநேத்திரம, நீலகண்ட முதலிய கோலங்களைத் தாஙகுதலும், ஒரு காரியார்த்தமாகச் சிவாநுஜ்ஞை கொண்டு பூமியில் வந்தால மீண்டுஞ் சாகாதிரு

த்தலும் பெற்று வாழ்ந்திடுவர். இவ்வுண்மையால், ருத்ராவதாரம் அநுமான் என்றாலும், நந்தி அவதாரம் அநுமான் என்றாலும், சிவாமிசம் நந்தியென்றாலும், நந்தியமிசம் அநுமான் என்றாலும், பிணங்கமாட்டார் பெரியோரென்க. இந்த நுட்பங்களை எங்ஙனே பட்டை நாமம் போட்ட பாஞ்சராத்திரிகளறியப் போகிறார்கள்.

எமது கையிலேந்திய இறகு சலியாதோடுந்திறத்தை நமதன்பரின்னுங் கொஞ்சங்கண்டு மகிழுமாறு செய்கிறோம். நந்திபகவான் இராவணனிடம் பிரஸ்தாபித்தது முக்யபுருஷனாக அநுமானையே. பின்னர் ஏனைய குரங்குகளைப் பிரஸ்தாபித்தனர். இராமனாதியரை விபக்ஷமாகக்கூறவில்லை. இவ்வுண்மை தோன்றவேயன்றோ வான்மீகமுழுதும் அநுமானது பிரதாபமும், வெற்றியும் கோஷிக்கப்படுகின்றன. இராமன்குழு மோகனாஸ்திரத்தாற்கட்டுண்டு சாவைத் தலைமேற் சுமந்தபோது சஞ்சீவி பர்வதங்கொண்டுவந்து அந்தப்பளுவை யிறக்கி யுய்வித்தவன் அநுமானேயன்றோ! அநுமானில்லாவிடின் இராமராவணயுத்தம் பூர்த்திகட்டுமோ? இராமனாதியர் இளைத்தும் களைத்தும் சோகித்தும் மோகித்தும் அழுதும் தொழுதும் மருண்டும் புரண்டும் வீழ்ந்து,முடிவில் சரயுநதியிலுயிர்விட்ட பாக்யமெல்லாம் அநுமானுக்குண்டா? இராவணனை யழிக்கவந்த இராகவன் வந்த வேலையைச் செய்யாமல், சீதையைக்காட்டுக்கிழுத்துவந்து மானமழிப்ப பொன்மானைத் துரத்திப் பெண்டைப் பறிகொடுத்துக் காடுமேடெல்லாந் திரிந்து கவலைவாய்ப்பட்டுக் கலங்கி நின்றவாறென்னை? சமையலுக்கிறங்கியவொருவன் நீர் நெருப்புகளைத் தேடியதுபோல இராவண ஸம்ஹாரத்துக்கே சீதையைப் பறிகொடுத்தன் முதலிய ஹேதுக்களைத் தேடினனெம்மிறையென்று பூர்வபட்சிகள் புலம்புவர். இந்த ஸமாதானம் சுத்தமூடனுக்கும் ஓர்சாளத்தையுண்டு பண்ணுகிறீர். சத்துருவைத் துன்பப்படுத்திக்கொல்ல வெழுந்தவன் தான் துக்கரூபியா

யொழுகித தம்மோதிருனென்றது தியாஜ்ய ஸமாதானமாம். இராமனழுதது போதாமல ஜநகன் செத்தானென்று மருண்டு சீதையும் அழவேண்டுமோ? இராமனழுத பிரபாவத்தை ஸ்ரீகாளமேகப்புலவர் “சத்தாதியைந்தையுந் தாங்காததெய்வந் தனிமறையுங்-கர்த்தாவெனுந்தெய்வ மம்பலத்தேநிற்கக் கனகவிரு-பத்தானவன்மகன் பொய்ச்சீதையைவெட்டப் பார்த்தழுத-பிதாவானவனறன்னை யோதெய்வமாகப் பிதற்றுவதே” என்று பிரசங்கித்த திந்த நண்பரறியார்போலும். பார்த்து மகிழட்டும். அநுமான இராமனைப் பிழைக்கச்செயதான்-சீதைக்குயிர் கொடுத்தான்-பரதனுக்குப பிராணபிச்சை தநதான்-பிறர் துன்பங்களும பெயாந்திடச செய்தான. இத்தனையுங கவனியாமல பூர்வபட்சியாரொருகால் அவ்வநுமான் இராமனைச் சுமநதும், அவனது பாதபக்தி செயதும பிரவர்ததிதத வாறென்னையென்று கடாவுவா. அதற்கும ஈண்டிறை தந்து மகிழச்செயவாம்.

அநுமான் தானகொண்ட குரங்குக்கோலத்துக் கேற்ப மனுஷ்யனுகிய ராமனை வந்தித்தது குற்றமாகாது. இராமன் தானகொண்ட ராஜகோலத்துக் கேறபப் பிராஹ்மணாகளாகிய விசுவாமித்திரா-வஸிஷ்டா-அகஸ்தியா முதலியவர்களை வநதித்தும, அவர்களுககூழியஞ்செயது பிரவாத்தித்ததும குற்றமோ? அநதரிஷிகள இராமனை ஸகருததாகவாவது காலிலவீழ்ந்து வந்ததிததுணடா? அமமுனிசிரேஷ்டர்கள் காலில வீழ்ந்து வழிபட்டதனுல இராமன் அவர்களிற் முழ்ந்தவனே? இன் னுமிதறகுப பாணனுக்குச சிவபரஞ்சுடராட்பட்டு நடித்ததையுமெடுத்ததுரைககலாம. ஈண்டைக்கு அது பொருத்தமில்லாத வுதாரணம். அநுமான் இராமனைத் தனக்கதிபனுகக்காட்டி, அவனுக்குத்தாணடங்கி நடககிறவனுக நடிககவேணடியது ஆவசியகமோவெனின், குரங்கு(மிருகம்) தாழ்ந்தது. மனுஷ்யன் உயர்ந்தவன். தெய்வம் மிகவுயர்ந்தது. ஈணடு மிருகத்தை யாளவேண்டியது மனுஷ்யன். நந்திபகவான் குரங்கு என்று

இராவணன் தம்மைத் தூஷித்ததை யநுஸரித்து அவனுக்
குக் குரங்கினாலேயே அழிவு கூறினர். அக்குரங்குவெள்
ளங்களை யாள்வதற்கு ஒரு மனுஷ்யன் வேண்டும், அந்த
மனுஷ்யன் தனக்கு மேலான தெய்வத்தி னவதாரமாயிடு
தல் வேண்டும். அந்தத்தெய்வம் சிவபரஞ்சுடரே. அந்தப்
பெரிய தெய்வத்தை மனுஷ்யனாய் வரும்படித் தான்விதிப்
பது அல்லது சங்கற்பிப்பது அஸங்கதம் (அபராதமான
காரியம்). இனித் தமக்குக்கீழ்ப்பட்டவர்களில் விஷ்ணுபெரி
யவர். இவரை அந்தமனுஷ்ய ஸ்தானத்தி னிறுத்தித் தாம்
நடித்தது ஸாமஞ்ஜஸமேயாம். பிராமணன் தனது குலத்
திலே ஆசிரியனை நேராவிடின், கீழ்ப்பட்ட குலத்திலே தேட
லாம் என்ற விதியும் இதனை நிறுத்தியவாறறிக. இவ்வாறு
விசாரித்துணர்ந்த சைவப்பெரியோர்களை இவரென்றுஞ்
சந்தித்திலர். சந்தியாமலே சைவர்கூறுஞ் சமாதானம்
இதுவென்று இவர் வருவித்துரைத்த அல்பவாக்கியங்க
ளெப்ரத்யவாக்கியங்களா யொதுங்கினமையால், இவருக்
குச் சித்தாந்தமாயி னின்ற "பராசி மற்றியானே வாதசேய்"
என்ற துண்டுவாக்கியத்தின் கதியையும் இனிச் சற்று விசா
ரிப்பாம்.

இந்தத்துண்டுவசனம் கம்பனதன்று என முன்னரே
பரிஷ்கரித்தோம். அதனால், அதனையடுத்து முன்னும்பின்
னுமாக ஏகதேச வசனங்களிருப்பின், அவையும் முதல்
வசனத்தின் கதியையே யடையும். பிரக்ஷிப்தங்களாகிய
இவை கதியை விளக்க வேண்டிய ஆவசியகமுமில்லை.
அதவா கம்பன் சொந்தச்சரக்காயிருந்தாலுங்கூட வான்
மீகத்தைப் பகைத்த வவ்வசனங்கள் சட்டைபண்ணத்த
க்கனவல்ல. கம்பன் வாக்கென்கொண்டவையே காலக்
கிளப்பிக்கொள்ளுமானால், பின்ன ரவற்றிற்கு வியாக்யா
தாக்களாய வரதக்க கம்பனிக்கவிராயர்கள் வார்த்தை
யெங்ஙனே மதிப்படையும்? கம்பன் தான் க்ஷேமமாய்
ஜீவித்திருக்கும்போது ஒருநாளிரவு சில இஷ்டர்களோடு

வீதிவழியாய்ப் போய்க்கொண்டிருந்தான். அப்போது ஒருவீட்டின் திண்ணையின்பேரில் ஒரு கவிராயன் கம்பராமாயணப்பிரசங்கஞ் செய்வதைக்கண்டு சிறிது நேரம் அங்கு நின்று கேட்டான். கேட்டவன் சிரித்து, உடனிருந்த இஷ்டர்களை நோக்கி, இவன் பிரசங்கிக்குங் கம்பராமாயணத்தில், கம்பன்பாடலும் (என்பாடலும்) சிலவிருக்கின்றன என்று சொல்லி வெறுத்துக்கொண்டான் என்று வித்வான்கள் சொல்லிக்கொள்வதுண்டு. இதனால், கம்பன்காலத்திலேயே கம்பராமாயணம் சீர்குலைந்துவிட்டது என்று ஏற்படுகின்றது. கொஞ்சம் சமீபகாலத்தில் நாமம்போட்ட கவிராயர்களாயிருந்த வேங்கடாசலமுதலி கோவிந்தபிள்ளை - இராஜகோபால பிள்ளை முதலியவர்களால் கம்பராமாயணம் பட்டபாடெல்லாம் பட்டு நிலைகெட்டுத் தட்டுத்தடுமாறிப் போனது யாருமறிவார்கள். அவர்களைப் பின்பற்றியெழுந்த நமது பூர்வபட்சியார் அவர்களையே பின்வியாக்யாதாக்களென்று பிரஸ்தாபித்தார். இந்தப் பூர்வபட்சிக்கு அதிகாரமாக யாம் அவர்களை மதிக்கவில்லையாகையால், அவர்கள் வியாக்யானம் எமக்கு வெகு துச்சமென்றறிக. இந்த நண்பரும், இவர் மெச்சிய வியாக்யாதாக்களும், இவர்கள் கொண்டாடுங் கம்பனும் விஷ்ணுமூர்த்தி அமரர்களைக் குரங்காயப் பிறக்கும்படி யேவியதற்கு யாதேனு மோரேதுகண்டு கூறினரா? கருடனுக்கு வலியன்குருவி வைரியானதுபோல அரக்கர்களுக்குக் குரங்குகள் வைரிகளா? கரடி-புலி சிங்கமுதலிய வலிந்த மிருகங்களைச் சொன்னாலுமொருவாறு பொருந்தும். நந்திபகவானது சங்கற்பமேயன்றே நாராயணனது ஆஞ்ஞைக்கு மூலமாய் நின்றது? இதனை யுணர்ந்தவர்கள் இராமாயண முழுதும் சுத்தசைவமாயிருப்பதறிந்து வான்மீகத்தைச் சைவராமாயணம் என்று வந்திப்பராகையால், அதற்கு விரோதமாகப்புலம்பும் எந்தராமாயண கர்த்தர்கள் வாக்கும் சத்தியத்தின் முன்னின்று ஜீவியாதென்க. அந்த

வாதம பேசவெழுந்த நணபர் இனியேனும் "புராரிமற்றி யானே வாதசேய" என்ற துண்டு வாசகியத்தைத் திலதர்ப்ப ணம் பணணி விடுவாராக.

## பூர்வபட்சம்.

"உத்தரகாண்டததிற் கூறியவணணம அவ்வரனார் தியும ஒரு குரஙகாய் அவதரித்ததென்க. நநதிதேவரவி சமே ரிஷபனெனனும வானரவீரன் எனறு நாரதிய புரா ணங கூறுகின்றது."

## சித்தாநதம்.

இபபோது விவகாரமெலலாம வானமீகம-கமபராமா யணம் என்பனவைகளைக்குறித்து. வான்மீகத்தைக்கமபன் செரு டரவேண்டியது நியதம. நமதனபா வான்மீகத்திலும், கம்ப ராமாயணத்திலும ரிஷபனைககாட்டி நந்தியை நிலைப்பிக்க வேண்டியது. இவைகளைக் கைகழுவிவிட்டு நாரதியத்தி ஞன்றுகொண்டு நியாயமிழந்தது பெருந்துக்க மென்க. இந்த நாரதியம "புராரிமற்றியானே வாதசேய" என்றதை இவ ருக்குச சாதித்துக் கொடுததிலதுபோலும. உத்தரகாண் டத்தில் என தமிசத்தாலொரு குரங்கு பிறககுமென்றதே ரிஷபனென்று இவர் சாதிககலாம. இவவகாமதேயக் குர ங்கை நநதிபகவான் இராவணவதத்திற்கு அக்ரகண்ய ஸ்தா னததிலுரைத்தாரெனபது கேவல அவிவேகமாம. நாரதீ யஙகூறுமாகுல் பிரக்ஷிபத மென்றொதுக்குவதே சால்பு டைத்தாம்.

## பூர்வபட்சம்.

அநுமான் இலஙகைக்குபபோனபோது இவன் என் னைசசபித்த நநதியோ, பாணாசுரனோ எனறு இராவணன் சங்கித்தான். அதனுல, அநுமானை நந்தியெனபது புலப்படு கின்றது இவ்வுண்மையால அநுமானைசசிவனென்று கூறு வது கூடாது என்று சைவர்கூறுவர். இது அஸங்கதம்.

இராவணன் இருவரைப் பிரஸ்தாபித்தபோது நந்தி யையெடுததுக் கொண்டது என்னை? பாணாசுரனைக் கொள்

ளலாகாதோ? பாணாசுரனைத் தள்ளியபடி நந்தியையுந்தள்ளவேண்டியதே, சிவன் அநுமான் என்பதே சால்புடைத்து.

### சித்தாந்தம்.

நந்திபகவான் சிவசேவகர் (தன்னைச்சபித்தவர்). பாணாசுரனும் சிவசேவகன். ஆயினும் அவனுக்குச் சிவன் சேவகராயிருந்து அநுக்ரகித்தனர். இவ்விருவருமே இராவணனால் மதிக்கப்பட்டனர். அவனுக்கு விஷ்ணுவினிடம் மதிப்பிருந்தால் இவன் விஷ்ணுவோ எனவும் அவ்விருவரோடு சேர்த்துப் படித்திருப்பானன்றோ? அவன் விஷ்ணுவை மதியாமைக்கு நமதன்பர் கதி தேடுவதைவிட்டு நந்தி அநுமானல்லவென்று வாதிடுவது மானமின்மையேயாம். அநுமானைப் பார்த்து இராவணன் இருவரைப் பிரஸ்தாபித்தானேனும் நந்தியையே முதலிற் கூறினான். நந்திபகவான் தமதம்சத்தாலொரு குரங்கும், தமக்குச் சமானமான பல குரங்குகளுந் தோன்றுமென்று கூறியிருருக்கின்றமையால், அநுமானைப் பார்த்தபோது இந்தக்குரங்கு நந்தியம்சத்தால் வந்த குரங்கோ, அவருக்குச் சமானமானவரா யெண்ணத்தகும் பாணாசுரனது அவதார ரூபமான குரங்கோ என்று இராவணன் சங்கித்தானென்று கொள்வதி லுண்டான பாதக மொன்றையுங் காணேம். இருவரையுங் கொள்ளலாமேனும் வந்தது ஒரு குரங்கேயாகையால் அவரை நந்தியம்சமானவரென்று கோடலிழுக்காதென்க. இதனை யுணராது பூர்வபட்சியார் சைவரைத்தூஷித்தது ஜந்மதோஷத்தின்பயனாம். இவரொருக்கால் கண்ணன் பாணனைச் செயித்து அவனுக்குத் துணைபோந்தசிவன் அவரது மக்கள் முதலினோரைத்துரத்தியும் வீரங்காட்டினர் என்று பெருமை பேசுவர். எமது சிவபாரம்யப்பிரதரிசினி-பாணாசுர விருத்தாந்தத்தில் இவரதுபெருமை குலைந்து இவர் மெச்சிய மயிரவதாரமூர்த்தியின் மகிமை சிதைந்து அலைதலால் விவேகிகளுண்மை யறியாமற் போகார். விரிக்கிற் பெருகும்.

## பூர்வபட்சம்.

கம்பனுக்கு உருத்திரனே அநுமானென்பது கருத்தானால், "ஊழியினிறுதி காலத்துருத்திரமூர்த்தி யொத்தான" எனவும், "ஒறுத்து ருத்திரனெனத் தனித்தனி யுரைத்தான்" எனவும (உருத்திரனையொத்தவன் அனுமானென்பது போதரக்) கூறுன என்று சைவர் கூறுவர். அது கூடாது. நூலாசிரியர் இராமபிரானை ஸாக்ஷாத் விஷ்ணுவென்று ஒரு இடத்திலும், பரசுராமனை யொத்தவனென்று மற்றோரிடத்திலுங் கூறினா. இதனால விஷ்ணுவும் இராமருமவேறு என்று கொள்வது மரபோ? இவ்வுண்மை தெளிந்தார அநுமான் சிவனென்பதிலொரு சந்தேகமுங் கொள்ளார.

## சித்தாந்தம்.

கம்பன் சிவனை அநுமானென்று ஸ்தாபிக்கவில்லையென்றதை மேலே நன்கு பரிஷ்கரித்திருக்கிறோம. அவனவ்வாறு செய்தானென்று நமதன்பர்போன்ற குறும்பாடிக்கவிராயாகள கூறித்திரிகின்றார்கள். தமக்கும், கம்பனுக்கும வான்மீகத்திற் பிரமாண மெஙகேயென்று கேட்டால தூரம்போய்த் திரும்பிப் பார்க்கின்றனா. இதனால் அநுமானைச சிவனென்று கூறுமலே சிவனையொத்தவன் என்று கம்பன கூறியது சாலபுடைத்தே. ஒருஇடத்தில சிவனெனறும, மற்றோரிடத்தில் சிவனையொத்தவனென்றும அவன கூறுதலைக் கூறியதாகக் கொண்டு இவா காலவிளம்பருந் செயவது வஞ்சனையேயாம. சிவனையொத்தவன என்று பிரசங்கித்த விடத்தில் அசசிவனை "ஊழியினிறுதிகாலத் துருத்திரமூர்த்தி" என்றான். ஊழியினிறுதிகாலம சர்வஸம்ஹாரகாலம. அந்தக்காலததில "బ్రహ్మవిష్ణుశ్చరుద్రశ్చ సర్వేవా భూతజాతయః। నాశమేవానుధావంతిసలిలానీవబాడబం" என்னுஞ சுருதி பிரமன், விஷ்ணு, உருத்திரனுதியர் நெருப்பில நீர்த்துளிகளாகின்றனா என்று கோஷிக்கின்றது. திரிமூர்த்திகளைச சுட்டெரித்துச சாம்பராக்கித் தனிமுதற்றாண்டவமூர்த்தியா யெழுந்தருளிய பெருமானது அழி

யா நிலைமையே கம்பன் வாக்கிற் பெறப்படுகின்றது. இவ்
வாறுசிவபரஞ்சுடரை வந்தித்த வித்வமணி அவ்வமலமூ
ர்த்தியை அநுமானாகப பிறந்தானென்று நிந்திபபாரா?
யாண்டுப் பிறப்பில்லை, ஆண்டுஇறப்பிலலை. யாண்டுப் பிற
பபுளது, ஆண்டு இறபபுளது என்பது தர்க்கநியதி. ஊழி
காலத்து ருத்திரமூாததிககு இறப்பு அலலது அழிவில்
லை. அதனாலவருக்குப பிறப்பு மிலலை. பிறவாத அவரை
அநுமானாகப் பிறந்தானெனறது தாக்கவிரோதம். அன்றியு
ம், சுருதியில், "యోవిస్ఫులింగేన లలాటజేన సర్వంజగద్భస్మసాత్కరోతి।
పునశ్చసృష్ట్వాపునరప్యరక్షద్దేవస్స్వతంత్రః ప్రకటీకరోతి" என்று கூறப்பட
டதில், சிவனாது நெறறிக்கண்ணினின்றும உளுந்துபரிமா
ணத்தளவு நெருபபுப்பொறியொன்று தோன்றி ஸர்வஜகத்
தையும் பஸ்மமாக்கிவிடுமென்றும, பின்னர்சசிவனே உல
கத்தை யுண்டுபண்ணிக காத்திடுவரென்றும், இப்படியே
திரும்ப அழித்தும் ஆக்கியும அளித்தும திருவிளையாடல்
புரிவாரென்றும் பொருளுண்டாதலை, வேதவித்துக்களறி
ந்து மகிழ்வர். இசசிவபரஞ்சுடரின் சந்நிதியில் ஒரு புழு
வாகவும் எண்ணவேலாத வொரு குரங்கை (அநுமானை)
அச்சிவனாது பூரணாவதாரம், அமிசாவதாரம என்றுவாயில்
வந்தபடி யெலலாம் பேசி வமபளக்கு நண்பராதியோர்கதி
இனி யென்னாமோ வறியேம். இனிக்கமபன் அநுமானுக்
குச் சிவவுவமை கூறினனென்பதேசித்தம. உலகமுண்டு
கடலிற்றூங்கும் விஷ்ணுவினது நிலைமையே ஊழிககாலத்தி
னியக்கமாக வாதிக்கும் வைஷ்ணவசித்தாநதத்தின் வாயில்
மண்போட்டான் கம்பனென்றறிக.

இனி விஷ்ணுவை யொத்தவன்-பரசுராமனை யொத்
தவன் இராமனென்றது என்னை யெனின், இராமன் விஷ்ணு
வேயாயினும், விஷ்ணுவானவர் அவதாரங்கடோறும் ஒன்
றேடொன்று மாறுபட்ட விகாரமெய்தலால், அவ்விகார
மூர்த்திகளோடும் அதிஷ்டான மூர்த்தியோடும் ஸந்தர்ப்
பத்துக்கேறப இராமனையுவமிதது விவசரிக்கின்றனர் பெ

ரியோர் பரசுராமனும், இரகுராமனும் விஷ்ணுவினது அவதாரங்களேயாயினும பரசுராமனுதைபட்டான், இரகுராமனவனை யுதைத்தான். உதைபட்டராமன் கார்த்தவீரியார்ஜுனனை யெதிர்த்து வெற்றி புனைந்து நின்றபோது இரகுராமனை யொத்துத் தோன்றினன என்றலிழுக்காது. இராமன்தசரதனேவுதலால காட்டுக்குப்போக விசைந்த போது ஜமதக்னி யேவுதலால தாயைக்கொன்ற பரசுராமனை யொத்துத் தோன்றினனென்ற லிழுக்காது. இவ்வாறுனவிவகாரங்களை யோசியாது நமதனபார்மனபபால் குடித்து அநுமானுக்குச சாதித்த பரத்வம காலைக்கிளைபபிக கொண்டதெனக.

இனி "மழுவலாணியாண்டும வைகுந - தடவரையதனை நோக்கித தாமரைச செங்கை கூபபிப்-படர்சுவான றனனை யன்ன பரமனும பரிவிற் பார்த்த-தடமுலை யுமைக்குக் காட்டி வாயுவின் றனய னென்றுன" என்று கமபன் கூறியதில், அநுமான் சஞ்சீவி பர்வதங் கொண்டுவருமபோது ஸ்ரீகைலாசத்தைக்கண்டு இரண்டு கைகளையுங்கூபபி வணங்கினன் எமபெருமான் அவனைப பரிவோடு பார்த்து அமமையாரை யழைத்து, ஏ பார்வதி! இவன வாயுபுத்திரன என்று கூறினார். இந்த ஸந்தாபபம சிவனே அநுமான் என்று கூசசுரலிடுவதற்கு ஓரணுத்துணையு மிடந்தராதுவிளங்கவும, "வாதசேய" என்றதனாலேயே தன்னைச சொலலிக்கொண்டாரென்று இவவாதியார வாய் திறந்து மலவலியின மணமெனறுணர்க. இராமனையும் விஷணுவையும் ஏககாலத்திலிருந்ததாகக கூற இடமிலலை. பரசுராமனையும விஷ்ணுவையும அபபடியே பிரஸ்தாபிக்க இடமிலலை. சிவபரஞ்சுடரும், அநுமானும நேரில ஸந்தித்தார்கள். அப்போது சிவன் பரிவோடு அநுமானைப் பார்த்தார் என்று சிவகருணை ததும்பியவிசேடங் கூறப்பட்டது. இவைகளை நோக்கும் விவேகிகள் எத்தனை வாதசேயை யிழுத்துவந்து குறுக்கே போட்டு இவர் ஜாலங் காட்டினும் இவரைத் துர்வாதி யென்றே

மதித்தொதுக்குவர். இனி "வாதசேய்" என்று நிகண்டு திவாகரங்களில் சிவன் பெயராக நுழைத்துத் தமது மதத்தை நாட்டிக்கொள்வாராக. இவரது கம்பராமாயணப் பாடல்களில், ஒரு சொல்-அரைச்சொறகளை யெல்லாம் பிடித்துக்கொண்டு காலம் போக்குவது அதிக வெறுபபையே தருகின்றது., யாதேனும் விஷயபோத மிருந்தால மனசுக்கு ஸுகமுண்டாகும். வெறுஞ் சொல்லை யிழுத்து மலலாடி வெல்லுந்திறனன்றிப் பல்லைக்காட்டிப பசபச வென்று இவர் விழிப்பது எமக்குப்பரிதாபமென்க. இவரில் வளவிலமையாமல் "விடைபிணிப் புண்டதபோலும்" என்று அநுமானைக் கம்பன் கூறிய சந்தர்ப்பத்தில அனுமான் நந்தியென்னுங் குறிப்புத் தோன்றுகின்றது எனப பிறர் கூறுவதாக வருவித்து, அதனைத்தமது சின்னமதிகொண்டு பரிகரிக்கிறார். பிணிப்புண்டவிடை யெனறது நந்திபகவானுக்கு அகௌரவமாம். இதைப பிடித்துக்கொண்டு கரையேறுத துணியார் சைவர்கள். நந்தியநுக்ரகம பெற றவர் அநுமானென்று மேலே யாம கிளத்திருேம.

## பூர்வபட்சம்.

கம்பர் வான்மீகத்தின்படி கூறுகின்றேனென்று செய்துகொண்ட பிரதிஜ்ஞைக்கு விரோதமாக வானமீகத்தில்லாத சிவனுரது குரங்கவதாரத்தைச் சொன்னது பிசகென்று சைவர் கூறுகின்றனர். அவ்வான்மீகிபகவான் தனதம்சத்தா லொருகுரங்கு வருமென்று நந்தி கூறியதாய்ப் பணித்தாரேயன்றி நான் அநுமானுய் வருவேனென்று சொன்னதாகப் பணித்தாரில்லை. இங்ஙனமாகவும், வான்மீகத்திலில்லாத விஷயத்தைச் சைவர்கள் கொண்டாடுவது யாங்ஙனம்? நந்தியானவர் விருஷபனென்னும் வானரவீரனுகப்பிறந்தது சத்தியம். கம்பர் வான்மீக மொன்றனையே முதனூலாகக் கொள்ளாமல் (முதனூலின்படிக் கூறுகின்றேனென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டு போஜன் முதலினேர் தமது இராமாயணங்களைப் பலபேதங்களமையப்

பாடினதுபோல) "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்து, பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி-அழியா மரபினது வழிநூலாகும்" என்ற விதியை யநுஸரித்து வான்மீகத்தோடு வேறு நூல்களையுந்தழுவி வான்மீகத்திற் கூறியுள்ளனவற்றைச் சிறுபான்மை விடுத்தும், கூறாதனவற்றை விரித்தும் நாளொன்றுக்கு எழுநூறு செய்யுள் வீதம் யுத்தகாண்டம் வரையில் பாடிமுடித்தனர். அவரது நூலில் பலபாடல்களொன்றற்கொன்று முரணித்தோன்றும். அவைகளுக்கு வேறு நூல்களைத் தழுவியே பொருள்கூறவேண்டும்-வான்மீகத்தைத் தழுவி யுரைக்கமுடியாது. "பராரிமற்றியானே வாதசெய்" என்றது பிறநூலாராய்ச்சிகொண்டு கூறியதாகலின், முதனூலை நோக்க வேண்டுவதில்லை.

## சித்தாந்தம்.

வான்மீகத்தின்படிக் கூறுகிறேனென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டவன் கம்பன். அவன் ஏனவ்வாறு செய்யவில்லையென்று சைவர் கடாவியது ஸஹஜம். சைவரொருவரும் நாங்கள் வான்மீகத்தின்படியே பிரவர்த்திக்கிறோமென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டதில்லை. அவ்வாறு செய்துகொள்ளாத சைவரை நோக்கி நமதன்பர் கேட்ட கேள்வி துப்பற்றதேயாம். இவர் கம்பருக்காகப் பரிந்து கண்ணீர் விட்டு அவன் மானத்தைக் காப்பாற்ற வெளிப்பட்டு இப்போது பதுங்குகிறார். இது ஒரு ஆண்மையா? வான்மீகர் சொன்னது சரியோ? தப்போ? எமக்கு ஆவசியகமில்லை. அவர் கூறியபடிக் கம்பன் கூறவேண்டியது. இதற்குக் கதி கூறாமல் நமதன்பர் "முதனூலை நோக்க வேண்டுவதில்லை" என்று முடிவுரைத்து முகங்கவிழ்ந்தாரிதென்கொலோ? ஆரம்பத்தில் "பராரிமற் றியானே வாதசெய்" என்று கம்பன் கூறியது வான்மீகத்தில் குப்தமாயிருக்குங் கருத்து என்று வாதித்து, இப்போது, அவ்வாறு கூறியது "பிறநூலாராய்ச்சி கொண்டு" என்று தூரப்போய் நின்று ஒருகல்லெறிந்தோடிய சிறுவனை யொத்து இவர் வாய்திறந்தது

இவருக்குப் பெருங்குறைவேயாம? இனி வானமீகிபக வான் நந்தியமிசத்தா லொரு குரஙகு வருமெனறதை அநுமான என்று சைவர்கள கொணடாடுணிபு யாஙஙனமென்று இவாகடாயினாரனறோ? யாம அநுமானை நந்தியென்று கொணடிலம. அவரநுக்ரகம் பெறற வொரு உருததிரனென்று மேலே விளககினோம. சிவனடியாரைச சிவனென்று வந்திபபதுபோல நந்தியநுகரகம பெறறவரை நந்தியென்று பண்டிதா கூறுவதுங குறறமாகாது. நாரதீயம நந்தியை ரிஷபனென்னும வானரனாகக கூறியதேயெனின, எநத நாரதீயம்? மூலபுராணமா, உபபுராணமா? எதுவாயிருந்தாலும. நந்தி அநுமான என்ற பாரததததோடு முரணியிழிந்திடும. நாரதீயததுக்குத தெரிந்தது வானமீகததுக்குத் தெரியாதோ? முககியமாகிய அதிலிலலாத ரிஷபனைச சிஷ்டரொபபாரென்க. வான்மீகா நிறக, கமபனாவது இந்தரிஷபனைக் கையாண்டானா? அவனுங் காற்றிலேவிட்ட வொரு அனுமசேயக்குரங்கை நமதன்பர் பதே பதே பிரஸ்தாபிப்பது ஆசை வெட்கமறியாது என்பதற்கே இனமாயதென்க.

இனிப போஜன்முதலினோர் வான்மீகததின் படிக் கூறுகிறோமெனறு தொடஙகி எப்படி பேதித்துச சொன்னார்களோ, அபபடியே கமபரும பேதித்துச சொன்னாரென்றும, முதனூலுககு வழிநூல பேதிக்கலாமாகையால் தமது வழிநூலில தாமும பேதிததனா கம்பரெனறும் இந்தபபண்டிதர் கடடுக் கட்டினார். போஜன் முதலினோ செய்த இராமாயணஙகள உலகததில வெகுபூஜ்யமோ? வான்மீகததோடு பேதிததது என்னவிசேஷம பெறறனா? வான்மீகத்தில் விடுபட்டவைகளை இதராமாயணஙகொண்டு உலகம அநுஸந்திககவேண்டுமே? எங்காவது அவை அநுஷ்டானததில் வந்திருககின்றனவா? சொன்மாததிரமாய்ச் சிவிக்கு மவற்றோடு கம்பராமாயணமும் கதியிழந்தடஙகியது எமக்குப்பரமசந்தோஷம். இனியிவர் கமபராமாயணம் எதற்கு வழிநூலாயிருக்கக்கண்டார்? வான்மீகத்துக்கெ

ணில், பிறநூல்களையு மிவர் பிரஸ்தாபித்தமையால் முதற்
பிரஸ்தாபம் முதலறுந்தது. அன்றியும், வான்மீகம் கீர்வா
ணம். அதற்குத் தமிழிராமாயணம் வழிநூலாகாது. மொ
ழிபெயர்ப்பாகும். இந்தமொழிபெயர்ப்பினைத் தமிழ் மு
தனூலாகக்கொண்டு, இதற்கு வழிநூல்—சார்புநூல்கள்
பிறப்பித்தல் நியதம். முதனூலின்படி வழிநூல் சார்புநூல்
களும் பூஜ்யமாகவே விளங்கும். இதற்கொரு நிதரிசனங்
கூறுகின்றோம்.

கீர்வாணத்தில் சிவஞானபோதமுளது. அதன் மொ
ழிபெயர்ப்பு ஸ்ரீ மெய்கண்டசிவம் செய்தருளிய தமிழ்ச்
சிவஞானபோத சூத்திரம். இந்த முதனூலுக்கு வழிநூல்
ஸ்ரீமத் அருணந்திசிவம் செய்தருளிய தமிழ்ச்சிவஞானசித்
தியார். இதற்குச் சார்புநூல் ஸ்ரீமத் உமாபதிசிவம் செ
ய்தருளிய தமிழ்ச்சிவப்பிரகாசம். இவைமூன்றும் லோ
கபூஜ்யமாய் வந்திக்கப்பட்டு வருகின்றன. இந்த முறை
மைதெரியாது குழறுபடிசெய்த இவரது பண்டிதத்திற
மை சாலவழகுடைத்து. இவர்கம்பனுக்குக் கௌரவங் கூ
றவந்து அவன் “வான்மீகத்தோடு வேறு நூல்களையுந் தழுவி
வான்மீகத்திற் கூறியவற்றைச் சிறுபான்மைவிடுத்தும், கூறாதனவ
ற்றை விரித்தும்” பாடினானென்று அநியாயமாய் வான்மீகத்
தை யிழித்துக்கூறினார் கண்டீர். வான்மீகர் சிவனை அநு
மானென்று சொல்லாததுக்கா துறுத்துக்கொண்டு வரம்
புகடந்த காரியஞ்செய்தார். இவரது அமங்கலப்பாட்டினை
த்தென எவருமிப்போதெளிதினுணர்ந்தமையால் இவரது
வார்த்தைக்கு இனிக் கௌரவமுண்டாவது கஷ்டதரமெ
ன்க. இவரது பிரசங்கத்தால் வான்மீகத்திலுள்ள மெய்
யைத்தவிர்த்தும், இல்லாத பொய்யைச்சேர்த்தும் நாளொ
ன்றுக்கு எழுநூறுபாடல்பாடினான் கம்பனென்று ஏற்பட்
டது. “முத்துவீரியம்” என்னுமிலக்கணநூல்செய்த கவி
சிரேஷ்டரொருவர் ஓரேநாளில் மதுரைவீரன் புராணம்
ஐஞ்ஞூறு பாடலிற் செய்துமுடித்தார். கம்பராமாயணம்

தாம்பிரசங்கித்தற் கருகமன்றெனக்கழித்து ஐயாயிரம் பாடலில் ஒரு இராமாயணம் பாடிமுடித்துப் பிரசங்கித் தார். இவ்வாறு பாடிமுடிக்கத்தக்கவர்க ளிப்போதும் அநேகரிருக்கின்றனர். இவ்வாறு விடைகள்பிறக்குமென்று பூர்வபட்சியறியார். அறிந்தால் கமபராமாயணத்தில் பலபாடல்க ளொன்றோடொன்று முரணித்தோன்றுமெ ன்றும், அவைகளுக்கு வேறுநூலகளைத் தழுவியே பொரு ள்கூறவேண்டுமென்றும், வான்மீகரைத் தழுவியுரைக்க முடியாதென்றும் நாவசைத்து மானமழியார். வான்மீகத்திற் சிலவற்றை நிஷேதித்தும், வான்மீகம் நிஷித்தமென்று வி டுத்த சிலவாபாசங்களைப் பூஜ்யமாகத் தழுவி யுரைதது மொருநூல் ஜீவிக்குமானல் ஆட்டுத்தலையோச்சன்பாடிய அந்தக் கஞ்சாமாலைப்பாட்டை நமதன்பரே யநுபவிதது வாழட்டும், விரிக்கிற் பெருகும்.

## பூர்வபட்சம்.

வான்மீகத்தி லிராமையால், அநுமான் சிவனென்ற தை இதரநூல்களாலொப்பாத சைவர்கள் வான்மீகத்திலி ராத இராமரது சிவபூசையைமாத்திரம இதர நூல்களைக் கொண்டே சாதிக்கிறார்கள். இதர நூறபிரமாணத்தை விரும்புமிவ்வோர் விஷ்ணுவானவர் சிவனுக்குக் கொடுத்தி ருந்த வரத்தின்படியேதான் இராமகிருஷ்ணாதி யவதாரங்க ளில் சிவனைப்பூஜித்து அவனுக்குக் கௌரவமுண்டுபண் ணினரென்று வராகபுராணங் கூறுவதை மாத்திரம் ஏன் அங்கீகரிப்பதில்லை?

## சித்தாந்தம்.

இராமனது சிவபூஜை வான்மீகத்திலில்லையென்று வம்பளக்தார். "అత్ర పూర్వం మహాదేవః ప్రసాదమకరోద్విభుః" என்ற வாக்கியம் வான்மீகத்தி லுள்ளது. இதில், பிரபுவாகிய மஹாதேவர் எனக்கிரங் கிப்பிரஸாதித் தார் என்று இராமன் கூறியவாய்மை வெளிப்பட்டது

சிவபரஞ்சுடரை மஹாதேவர் என்று பிரஸ்தாபித்துத் தமக்கு அவர் பிரபுவென்றும், தமக்குப் பிரஸாதித்தாரென்றும் தாசரதி மகிழ்ந்துரைத்த வசன பங்தியை யோராமல் இவர்போடுங் கூசசலை யொருவரும் மதியார். பிரபுவாகிய சிவசந்நிதியில் அவரது பாதசேவை செய்யும் (அவருக்கு ஊழியஞ்செய்யும) இராமன் சிவபூசைசெய்தானென்றதைபிழுக்காகக் கொண்டதென்னமதியோ? இராமாயணத்தி னுபப்ரஹ்மணமாக இதரநூலகளை யாமதழுவுவோம. இராமாயணத்திற் சிவபூசை யிலலையென்று வீண்வமபளப்பவர் வைஷ்ணவர்கள். இராமாயணததிலில்லாத சிவனது குரஙகவதாரததைச சாதிக கழுந்துவதுபோல இராமாயணததிலிருககும இராமனது சிவபூசையைப பேதிக்க முந்துவா நமதனபரும அவரினததவரும. மஹாதேவசப்தத்தைச் சிதைத்து வருணபரமாக்கி அவனகாலில் வீழ்ந்தா னிராமனென்று கூறுவது அவருக்கு ஆசை. மஹாதேவசப்தம வேறு ஸநதர்ப்பத்திலும படிக்கப்பட்டிருக்கின்றது. "సిద్ధార్థశంసనూంకస్సై" என்று தொடங்கி "మహాదేవప్రసాదాశ్చ పితామహసమాగమః" என்று அநுமானிடம இராமபத்திரர் பரதனுக்குத் தெரிவிக்குபபடி சொல்லியனுப்புகிறுர். இந்த மஹாதேவசப்தத்தால் சிவபரஞ்சுடரையே, இனிது விளககி அமமஹாதேவபபிரஸாததால் தாம் கிரமமாயடைந்த நனமைகளை இராமன் பிரகாசப்படுததியதாக ஏறபட்டது. மஹாதேவ சப்தம் இராமாயணத்திலெங்கெங்கு வருகிறதோ அங்கெல்லாம் சிவபரஞ்சுடரையே விளக்குகின்றனர் வான்மீகிபகவான். இராமன்சீதையினிடத்திலும, அநுமானிடததிலும மஹாதேவப்பிரஸாதத்தையே தானடைந்தபேறாகக்கூறிமகிழ்ந்தானகையால், இராமாயணத்திற் சிவபூசையில்லையென்று பூர்வபட்சி யுரைத்த பொய்வாதம் தூச்சமா யொதுங்கியதென்க. நிற்க.

வேறுநூல்கொண்டு இராமனது சிவபூசையைச்சாதிக்குஞ்சைவர்கள், அந்தப்பூசைக்கு ஹேதுக்கூறிய வராகபுராணத்தையுந் தழுவி, அதிற்பெறப்பட்ட வரதான பாலநத்தையும் ஏனங்கீகரித்திலரென்று நமதன்பர் கடாவெழுப்பினாரன்றோ? இவருக்குப் புத்திமாலின்யம் அதிகம் போலும். ஒருவர் தனக்கநுகூலமானகாரியந் தேடுவார்களேயன்றிப் பிரதிகூலத்திற் பிரவேசியார். வான்மீகத்திற் போந்த இராமனது சிவபூசையை இதரநூல்களகொண்டு நன்குவிளக்குவது ஆவசியகம். அவ்வாறு சாம்பவர்கள் செய்து மகிழ்கின்றனர். வராகபுராணம் சிவஸர்வோத்தமத்தை யழிக்குமானால், அதன் முகத்திலேனோ விழிப்பார்கள் அப்பெரியோர்? இராமன் சிவபூசைசெய்ததுபோலச் சிவன் விஷ்ணு பூசைசெய்தாரென்று இவர்பிரமாணங்காட்டினு மிவரதுமனோரத மொருவாறு ஈடேறும். அப்படிக்கின்றி (அவதாரங்கடோறு முன்னைப்பூசித்து உனக்குப் பெருமையுண்டுபண்ணுகிறேனென்று) சிவனுக்கு விஷ்ணு கொடுத்த வரத்தைப் பிரதிபாதிக்கிறது அந்த இழவுப் புராணமென்று சாட்சிபகர்ந்தது இவருக்கு ஸங்கடத்தையே தந்ததென்க. ஒரு அம்பட்டன் வேதியனொருவனைப் பார்த்து எனக்கு நீர் க்ஷவரஞ்செய்து என்னைப் பெருமைப்படுத்தக்கடவீர் என்று பிரார்த்திததான். அப்படியே மறுநாள் வேதியன் அம்பட்டனுக்கு க்ஷவரம்செய்து பெருமையுண்டுபண்ணினன் என்பதே நமதன்பரது சித்தாந்தத்திற்கு நிதரிசனமாம். வேதத்தில் "நாராயண: பரோத்யாதா" என்றும், "ஶிவ ஏகோ த்யேய:" என்று கூறப்பட்டிருக்கின்றன. இதனால், சிவபரஞ்சுடர் பிறரால் தியானிக்கப்படுபவர் அல்லது பூசிக்கப்படுபவர் என்றும் விஷ்ணுவானவர் அச்சிவபரமாத்மாவைத் தியானிக்கின்றவர் அல்லது பூசிக்கின்றவர் என்றும் ஏற்பட்டது. விஷ்ணுமூர்த்தி சிவத்தியானஞ்செய்கின்றவர் என்று கோஷிக்கும் வேதமுணர்ந்தார்க்கு அவ்விஷ்ணுவினது அவதாரங்களாகிய

இராமகிருஷ்ணாதிகள் சிவபூசை செய்கின்றவர்களென்பதி லேனோ ஆசங்கையுண்டாகும்? அம்பட்டனுக்குப் பார்ப்பான க்ஷவரஞ்செய்து யாண்டுந் தன்மானமழியான். அம்பட்டனே பார்ப்பானுக்கு க்ஷவரஞ் செய்து கிருதகிருதயனாவான். விஷ்ணுவானவர் சிவனைப் பூசித்து யாண்டுந் தனது மானமழியார். விஷ்ணுவே சிவபூஜை செய்து கிருதகிருதயராவரென்க. நமதன்பராவது அவரினத்துப் பண்டிதராவது விஷ்ணுவைத் தியேயரென்று வேதப்பிரமாணங்காட்டி இராமனது சிவபூசையை ரக்ஷுசெய்யட்டும். சுருதி "ஶிவஏகோ த்யேயஃ" என்றதுமாத்திர மன்றி "ஸர்வோ ருத்ரோ த்யேயஃ" எனவும், "காரணந்து த்யேயஃஸம்புஃ" எனவும், "த்யாணாதீசானம்" எனவும் பலவாறெழுந்து சிவனைத் தியேயத்துவத்தைச் சாதித்தது. இவ்வுறை யுணர்ந்தால் இராமாயணத்தில் சிவபூசை பெறப்படுவது அஸங்கதமென்று கொண்ட இவரது வலது துணிக்கப்படடொழியு மென்க. அநந்த சயனத்தில் விஷ்ணுவினது தக்ஷிணஹஸ்தத்தில் சிவலிங்கம். இராமேசுவரத்தில் இராமனுக்கு எதிரில் சிவலிங்கம். பத்திராசலத்தில் இராமனது தலையில் சிவலிங்கம். இவ்வாறு சிவலிங்க மயமாய் விளங்கும் இராமனது சைவக்காட்சியை நமதன்பர் பேதித்து விடுவாரோ? "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங் கல்லா ரறிவிலாதார்" என்பதற்கிலக்காகிப் பரிபவ மெய்தாது சுகிப்பாராக.

## பூர்வபட்சம்.

தேவர்கள் அரக்கர் செய்யுந் துன்பத்தை உருத்திரமூர்த்தியினிடம் விண்ணப்பித்துக்கொண்ட காலையில், அவ்வரக்கர்களை யாம் கொல்லமாட்டோமென்று சிவன் கூறினர். அதனால் அச்சிவன் அநுமானாய்ப் பிறந்து அரக்கர்களை யழித்தானென்னல் யாங்ஙனம் என்று சைவர் கடாவுவர். ஜயவிஜயர்களை அவரெடுக்கும் பிறவிதோறும் விஷ்ணுவேதானழி யழிப்பதாக வரங்கொடுத்திருப்பத் துணர்ந்த சிவன் விஷ்ணு செய்யப்போகிற காரியத்தைத் தாம் செய்

வதில்லை யென்று கூறியது ஸஹஜம். சிவன் அரக்கரைக் கொல்லோமென்றது ஜயவிஜயர்கள் பிறப்பாகிய இராவண கும்பகர்ணாகளையேயன்றி யேனை யரக்கர் குழுவைய ல்ல. ஏனையரக்கர்களையுங் கொல்லேமென்று சிவன் சொன்னாரலோவெனின், "மல்லார புயத்துச் சுகேசனறன் வழியினுதித்த வல்லரக்கர், எல்லாப் பிழையுஞ்செய்தாலு மெனனை யடைந்தோ ராதலினுல், கொல்லே மவரை யெனறமையாற கொல்லு முபாயங் களுமெல்லாம், வலலோனறிருமா லெனறவர்க்கு மங்கை பாகன விடைகொடுத்தான்" என்று கமபர் கூறியது சத்தியம். ஆயினும், இயற்கை யுருவத்தோடேகிக் கோருமல் வேற்றுரு வெடுத்து (அநுமானுயபபிறந்து) அரக்கர்களைக் கொன்றனன் சிவனென்றுணர்க. தாங்கள் கொடுத்தவரங்களுக்கு மாருக விஷ்ணு-சிவன் முதலாயினோர் வேற்றுருக் கொண்டு அரக்கர்களை யழித்தலியற்கை யென்க. இரணியனை நரசிங்கமாகத் தோன்றி விஷ்ணு வழித்ததும், சூரபதுமனை முருகவேளாகத் தோன்றிச் சிவனழித்ததும உண்மை நூல்களிற் கண்டுணர்க.

### சித்தாந்தம்.

சிவன் அநுமானுய்ப பிறக்கவில்லையென்று பிரபல யுக்திப் பிரமாணங்களால் மேல் யாம ஸ்தாபிததோ மாகையால், அவ்வநுமான் அரக்கர்களை யழித்தது முதலிய காரியங்கள் சிவபரஞ் சுடரைச சென்றடையமாட்டா. சிவன் அநுமானென்று யாமொப்பாமையால, இவரது நீண்ட (பயனில்) பிரசங்கததுக்கு விடையிறுக்கு மாவசியகங் கண்டில மென்க. நந்திபகவான தமதமிசத்தா லொரு உருத்திரரை விடுத்து அநுமானைகப் பிறக்கச்செய்தது சுவேச்சை. விஷ்ணுவை இராமனுக விடுத்து அவ்விராமனை யதிட்டித்து இராவணனை யழித்ததுஞ் சுவேச்சை. காணுங்கண்ணுக்குக் காட்டுங் கதிரொளிபோலிருந்தியக்கும் பரமபுருஷனை விஷ்ணுவின துள்ள முணர்ந்தியங்குகின்றவரெ

ன்று தூஷித்த பூர்வபட்சி மதனைக்கு யாம் அதிகமாக வியசனப்படுகிறோம்.

## பூர்வபட்சம்.

அநுமான் வாயுவின் கூறால வேகத்தையும, உருத்திரமூர்த்தியின் பூரணாமிசத்தால வீரம-விசுவரூபம-விசுவரூபத்தில் ஐந்துமுகம-மூன்று கணகளையுந்தாங்கி விளஙகினன.

## சித்தாந்தம்.

நமதனபர் அநுமானைப பூரணாமிசம பூரணாமிசம் என்று பிரஸ்தாபிபபது கல்வியறிவு போதாமையெனறு யாம பலவிடங்களிற் கூறியுள்ளோம. எணடு மதனையே கொண்டிடுக. இவா பூரணாமிச மென்றதைச சிலவிடத்தில் மறநது அமிசாவதார மென்றுங கூறினர். இரண்டு விதமும அஸதயேயாகையால, அவரெபபடிக கூறுவதிலு மெமக்குப் பாதகமிலலை. அநுமானுககு வநத விசுவரூபம மூன்று கண்கள முதலியன சிவாவதாரததின விசேடமானால, கண்ணன கொண்ட விசுவரூபம்-வீரம, இராமன்கொண்ட "రామం త్రినేత్రం సోమార్ధధారిణం శూలినం వరం" என்ற உபநிஷத்போதகமான சைவகோல மித்யாதிகளை இவர் எவ்வாறு கொணடு கூறுவா? ஈசுவரப் பிரஸாத மெயதினோர்க்கு ஐசுவரியயோக மென்னும் சைவ நலங்கள் நிகழ்வது ஸஹஜம. ஈசுவரப பிரஸாத மெயதிய இராமகிருஷ்ணாதிகளிடத்தும் ஈசுவரப் பிரஸாத மெய்திய நந்திபகவானிடத்தும், ஈசுவரப் பிரஸாதமெய்திய வாமதேவர், மங்கணிகர், சௌபரி முதலிய சாம்பவமணிகளிடத்தும் விசுவரூபாதி விசேஷ ஸம்பவங்கள் நிகழ்ந்தன வெனல் சத்தியம். இவற்றை யோராது அநுமானுக்கே அது சொந்தம் பேலவெண்ணி அவனைச் சிவாவதாரமென்று கூறத்துணிந்தது ஸர்வாஸங்கத மென்றறிக. விரிக்கிற் பெருகும்.

## பூர்வபட்சம்.

விஷ்ணுவானவர் நரசிங்கமாக அவதரித்து இரணியனைக் கொன்றார், சிவன் சரபமாகவந்து நரசிங்கத்தை யழித்தனன். திருமால் கண்டபேரண்டமாக அவதரித்துச் சரபத்தைக் கிழித்தெறிந்தனன். சிவன் சர்வதோ முகமென்னு மவதார மெடுத்துக் கண்டபேரண்டத்தை யழித்தனன். திருமால் சாவதோபத்திர மென்னு மவதார மெடுத்துச் சர்வதோ முகத்தை யழித்தனன் என்று முறையே விஷ்ணு புராணங்களும், சிவபுராணங்களுங் கூறுகின்றன. இவ்வவதாரங்களைக் குறித்து மந்திர சாஸ்திரங்களும் விரிவாய்க் கூறுகின்றன. இதனால், விஷ்ணுவுக்குப் பிறப்புண்டானது போலச் சிவனுக்கும் பலபிறப்புக ளுண்டாயிருக்கின்றன. இவ்வாறு பிறக்கத்தக்க சிவனைப் பிறப்பில்லாதவனென்றும், அவன் எப்படி அநுமானுயப் பிறத்தல் கூடுமென்றுஞ் சைவராசங்கிப்பது நியாயமா? நரசிங்கத்தை விஷ்ணுவினது அவதாரமென்றபோது சரபத்தைச் சிவாவதார மென்றல் ஏன் கூடாது?

## சித்தாந்தம்.

இரணியன் தேவகண்டகனுன அசுரன். அவனைத்தேவர்களிற் சிறந்த விஷ்ணுவானவர் நரமடங்கலாய்த் தோன்றியழித்தனர். அப்படியழித்தபோது அவனது மார்பைக் கீண்டு, இரத்தத்தைக் குடித்தனர். அதனால் வெறிகொண்டு தன்னறிவுதப்பித் தேவர்கள்மேற் பாய்ந்து இம்சிக்கத் தொடங்கினர். அப்போது தேவர்கள் விஷ்ணுசர்வபஞ்சனனுய் விளங்கிய சங்கரனைச் சரணடைந்தார்கள். அந்தப் பரமதயாளு சரபமாய்வந்து, வெறிகொண்டு அங்குமிங்கு மலையும் விஷ்ணுமேற் பாய்ந்து ஊர்க்குருவியைக் கருட னடித்துக்கொண்டுபோவதுபோல, கீழே பறந்து வந்து காலினுற் கௌவிக்கொண்டு மேலே போய் உதறினர். நகங்களாற் பீறியத னுடல் பிளந்து தோலுரிபட்

டது. அதனைத் தேவர்கள்வேண்டலால அரையிலுடுத் தருக் ரகித்தனர் அமபிகாபதி. நரசிங்கன் இரணியனைககொன்ற வெற்றி நரசிங்கதாபனியுபநிஷத்திலும், சரபமூர்த்தி நரசிங் கனைக் கொன்றவெற்றி சரபோபநிஷத்திலும முழங்கப்படு கின்றன. பிரமாணங்களில சிறந்தபிரமாணம் வேதாந்தம் அல்லது உபநிஷத்து. இதனின்மிக்க பிரமாணமொன்று மிலலை. நமதனபா மேலே காட்டிய புராணஙகளும், மந்திர சாஸ்திரங்களும உபநிஷத்தின் காலின்கீழடஙகின. ந்ருஸிம் ஹதாபனியைப பூர்வபட்சமாககி யெழுநத சரபோபநிஷத் தினமேல நமதன்பா பிரஸ்தாபித்த கண்டபேரண்டத்துக்கு ஒரு உபநிஷத்துண்டானாலன்றோ சரபோபநிஷத்துப பூர்வ பட்சமாகும ? சித்தாந்தமாய்நின்ற சரபோபநிஷத்தை யசை க்க விஷ்ணுவாலும முடியாதாகையால, பொய்யையெலலா முடைந்த கண்டபேரண்டம்-சாவதோமுகம்-சாவதோபத் திர முதலிய கலபனைகளைக சடைவிதியிற கொண்டுவந்து விலைகூறியது விவேகிகள் காலின்கீழொதுஙகியது. நதிர சாஸதிரஙகளில கண்டபேரணடாதி விஷ்ணுஸ்வரூப விஷ யம் ஒருநதுக்கும் கிடையாது. நரசிஙகம்-சரபம இவைகளு ககு மாத்திரமே மந்திரோபாஸனையுணடு. கிற்க.

நமது பூர்வபட்சியார் நரசிஙகத்தை விஷ்ணுவினது அவதாரமென்றபோது 'சரபத்தைச சிவாவதார மென்றல் ஏனகூடாது என்று கடாயினரன்றோ ? விஷ்ணுவுக்கு நர சிங்கப பிறபபுநேர்ந்தது பிருகு சாபததால. சிவனுக்குச சரபகோல முண்டானதற்கு ஏது வென்னை ? சிவானுக்ரகத் தால நரசிங்கம் இரணியனைவென்றதைத தனதுவெற்றி யென்று கொண்டவகநதையை யிரிக்கவே சரபகோலம வெ ளியாகியது. இதனால, நரசிங்கத்தைப்போலச சரபகோலத் தை ஸாமானியமாகக் கருதிய வைஷ்ணவரறியாமைககு விய சனப்படுகின்றனர் பெரியோர். சிவனாரது சரபகோலத்தை நரசிஙககோலத்தோடு சேர்க்க வாசைப்பட்டநண்பர் கண்ட

பேரண்டம்-சாவதோபத்திரம் என்பவைகளையும் விஷ்ணுவவதாரங்களிற் சேர்க்கவேண்டியது ஆவசியகமன்றோ? அபபடிச்சேர்த்தால, விஷ்ணுவினது அவதாரம் பத்தெனபது போய்ப் பன்னிரண்டெனறு பிரஸித்தியுண்டாமன்றோ?பத்துக்குத்தான் பிருகுசாபங் காரணம். எஞ்சியவிரண்டிகும யாருடைய சாபங்காரணம? இவ்வாறு அலக்கண்படுங் கண்டபேரண்டாதி அவதாரக்கதைகள் ஸாதுக்களுக்குத் தியாஜ்யமென்க. சரபகோலததைத் தேவாரமெலலாந் துதிக்கின்றன. கண்டபேரணடாதிகளைத் துதிததவோர்பாடல் நாலாயிரத்திற் கிடைக்குமா ! இரணியனைக் கொன்றகதைதககு நாலாயிரத்தில் ஏராளமான பிரமாணமுண்டு. இவ்வாறு கதியிழநதலறும் பூர்வபடசியாா ஏனிவ்வபத்தபஞ்சாங்கம்படிக்க முநதவேண்டும்? ஆஞ்சநேயாவதாரவைபவம கூறுகிறேனென்று பீடிகைபோட்டு எத்தனையாபாசங்களை இடையிறகொண்டுவந்து கொட்டியளக்கிறார் ! "அரகோதண்டகண்டகன்" என்று சந்தடியோடு சந்தடியாக ஒன்று நுழைததார், இவ்வலங்கரத்தை யெழுதி என்னவாரிக்கொண்டாா ! சிவனுடைய வில்லை இராமனொடித்துவிட்டானும. இவர் இவ்வாறு எழுதினமையால, யாம "விஷ்ணுபுஜகர்வபஞ்சனன்" எனவொன்று எழுதிவைததோம. இன்னுமெழுதுவதென்றால்' எணணிறந்தனவுள. திறக.

இவரது கண்டபேரண்டாதிகள் வெறும்பொய்யென்பதற்கு வேறு நியாயமுங்கூறுகிறோம். விஷ்ணுபகவான் எதிரிசருக்குத் தெய்வம். சிவபெருமான் எமக்குத தெயவம். இருவரும் இரண்டு தெய்வங்களை யொப்பினும் உண்மையி லிரண்டு தெய்வங்களிருக்கமாடடா. இவருள், விஷ்ணுவாவது, சிவனாவது, இரண்டுமொழிந்த வேறு ஒரு பொருளாவது தெய்வமாகநிலைத்தல்வேண்டும. இப்போது யாம் (காரியம் முடிய வேண்டியதற்கு) விஷ்ணுவையே தெய்வமென்று ஒப்புகிறோம். விஷ்ணுதெய்வமானல், தான் நரசிங்கவுருவெடுதத

பின்னாச சரபந்தோன்றித் தன்னைஜாடும் என்று தெரிந்து கொண்டிருக்கும சரபத்தால் ஜாடப்படுவது தெய்வமுமாகாது. அந்தச் சரபத்தைத தான் கண்டபேரண்டவுருவெடுத்து அதன்பின்னரழிப்பதாகவுந் தெரிந்துகொண்டிருக்கும அந்தக கண்டபேரண்ட வுருவத்தைச் சாவதோமுகந்தோன்றி அதன்பின்னா நிர்மூலமாக்குமென்றும, அதன் பின்னர்த் தான் சாவதோபத்திரமாகத்தோன்றிஅந்தச் சாவதோமுகத்தையும அழித்தல நிஜமென்றுந தெரிந்துகொண்டிருக்கும். உள்ளபடியே இந்தஸம்பவங்களை யெல்லாமறிந்துகொள்ளத் தகக வொருதெய்வத்துக்குப பினகேடுகள்வரஹேதுவில்லை. இவர்கூறிய அவதாரமுறைமையும், சண்டையழிவுகளும் ஸாமானிய ஜீவதாமம் இவ்வஸங்காத்மவாதத்தை யாமொப்பவில்லையாகையால். விஷ்ணுவின் கதியைச் சிவனிடமுமேறறிய விவாதப்ரசங்கம எமது காற்கடையின்கீழொதுங்கிபவாறறிக. ஜீவன்கள், தேவாசுரமனுஷ்யமிருகாதி பல ஜநமங்களிலுழலும். விஷ்ணுவாகிய ஜீவன் தேவன்,ஹிரணியனாகிய ஜீவன்அசுரன்,இராமனாகிய ஜீவன் மனுஷ்யன்,வராகமாகிய ஜீவன் மிருகம. இந்த ஜீவபேதங்களை யியக்கிநடத்துபவர் பதி இவரே பசுபதியென்று வநதிககபபடுவா. அவவாறியக்குங்கால் அவ்வச்சீவர்களது கன்மாநுகுணமாகச் சுகதுக்கங்களையூட்டி யுபகரிப்பர். சுகம் அவரதுஅநுக்ரகததாலும் துக்கம அவரது நிக்ரகத்தாலும் ஜீவாகளுககு ஸமபவிக்கும் இனி விஷ்ணுமூாத்தி ஒருகௌரவமான ஜீவன் இநத ஜீவனுககுப் பத்துபபிறவிகள் காமததால வாய்ததன. அப்படி வாயத்தபோது, பததில் ஆறுபிறவிகள நிக்ரஹத்தைபும், நானகுபிறவிகள் அநுக்ரஹத்தையுஞ் சிவபெருமானாலடைநதன. நிகரகமெய்திய ஆறுஜநமஙகளில நரசிங்கமொன்று. இந்தநரசிங்கத்தையே தூக்கி யுபாவைககப்பாாக்கிறார் நமதன்பர். இதனமானத்தைக் காககத தலைபபட்டதுபோல மீன், ஆமை, பன்றி முதலிய உருவஙகளைச சிவன் அழித்த போதும மேலுக்குமே யினனுமவைகளுககுப் பிறவிகளைக்

கூட்டி வெற்றிப்பாட்டைத்தாபியாது இவரும, இவரினத தவரு முறஙகிக்கிடப்பதென்னேயோ ? இவ்வுண்மையுணர்ந்தபேர் சிவசரபதநதை வந்தித்து உயயுநெறி தேடுவரென்க

இவரது நரசிஙகததலைத யாம பசுவென்று கூறினேம பசுவானால் பூரணத்வமதற்குணடாகுமா ? இரணியன பொருட்டுத தூணிலிருநது தோனறியதால, பதியெனபதே சிறக்குமெனின், அதுகூடாது. ஏககாலத்திலெலலாவிடத்தும ஆவிரப்பவிதத காட்சியை இவரது பிரசங்கம் தாபியாமையால, நரசிஙகக்காடசி பூரணத்வத்தைச் சாதித்துககொடுக்கமாடடாதென்க. வில்லடி - பிரம்படிகளைத் தாஙகியும, யோகிருந்தும், திருக்கண்கள் மூடப்பெறறும உலகமுழுதுந் தமதியக்கத்தை விளககிய சிவபராகுசுடரினது பூரணதவததை யோசிததடஙகுக. நரசிஙகம் தம்பத்தின் மூலைத்ததும், கண்ணன் கோபிகைகளில்லந்தோறுமிருந்து நாரதருக்குக காட்சிகொடுத்ததும சௌபரிமுனிவர் தமது மனைவியரிலலந்தோறுமிருந்து அவ்விடங்களிலவந்த மாமன் மாமிகளுக்குக் காடசிகொடுத்த பண்பினையே நிகர்க்கும். இவ்வரியபேறு சிவாநுக்ரகத்தால் ஜீவாகளுக்குப் பிராப்தமாகத் தகக ஐசுவரியயோகமாம. சிவாநுக்ரகத்தைப பெற்ற ஜீவர்கள சிவனைபபோலவே தோறறம - செய்கைகளைக்காட்டிப் பிரவாத்திக்கினும விசேட அறிவுடையாராகரு உணமை வெளியாமெனக. "மாலயனுதிபசுககள் கடவுளா, போலிருப்பாரவருக்கீபற, போற்றும்பதியாகாருக்கீபற" எனபதனுனுந் தெளிந்திடுக. இனி "శ్రీవిష్ణుః పశవః । దేవాః పశవస్తత్వ్య। శ్యాయశ్చేశ్చేర్బ్యహ్మ । దయః పశవస్తత్వ్య। రుద్రః పశూనామధిపః । ఇతి శ్యాయశ్చేః" என்னுஞ் சைவபுராண வசனமும பசுக்களைப் போர்குறித்து விளக்கின. இவ்வுண்மைதெளியாமல இவா பரம்பொருளாகக்கொண்ட நரசிங்கனைப் பிரதிபாதிககும் ந்ருசிம்ஹதாபனியில், "స హోవాచ ప్రజాపతిః" என்றாரம்பித்து, "ప్రథమం పాదం జానీయాత్" என்று முடித்து, அந

ந்தரம் சூரியனை இரண்டாம் பாதமும், சந்திரனை மூன்றும் பாதமுமாகச்சொல்லி "సబ్రహ్మసశివస్సహరిస్సేంద్రస్సోక్షరః పరమస్స్వరాట్" என்றறளெருடக்கத்து வசனத்தால திரிமூர்த்தியுத்தீர்ணரான துரீயவஸ்துவையே நான்காவதுபாதத்தின் அதிஷ்டானமாக நிலைபெறுவித்து, பினனும இந்த ஸாமத்தினது நானகுபாதத்தையுஞ் சொன்ன பிரஜாபதியானவர் "ఋతగ్ం సత్యం పరబ్రహ్మ। పురుషంకృష్ణపింగళం॥ ఊర్ధ్వరేతంవిరూపాక్షం శంకరనీలలోహితం॥ ఉమాపతిః పశుపతిః। పినాకీ హ్యమితద్యుతిః॥ ఈశాన స్సర్వవిద్యానాం। ఈశ్వరస్సర్వభూతానాం" என்றித்யாதிமந்திரத்தையுஞ சொல்லி, அந்தபிரகரணத்தை யுபஸமஹாரஞ்செயதிருககின்றனா. இதனல் நருஸிமஹதாபநீயம சிவபரத்வபோதகமே எனபது சொல்லாமேயமையும் இதின மாததிரமேயனறி நாராயணோபநிஷத்து-இராமதாபநி-இராமரஹஸ்யம், இத்யாதியுபநிஷத்துக்களிலும சிவபாதவமே கோஷிக்கபபடுகினறது. சிவபாரஞசுடரை வேதமானது. "ఏకోదేవ నిష్కలఃయః" என்றும் "సర్వశ్శ్యుక్త ఓంమ్యగ్యః। సర్వాగమమయశ్శివః" எனறும வந்திடபதிவருணாரா விரிககிற பெருகும.

இவ்வபணடிதாரத்ன மிவ்வளவிலமையாமல சிவனுக்குப் பிறப்புண்டென்பதைச் சாதிக்கிறேனெனறுகாசிகாண்ட ததிலிரணடுபாடலகளெழுதிக் கண்சாமபினா. அவைவருமாறு:

' எரித வழ்ந்தெறி முததலைச் சூலவே லேந்து
கருணை யஙகடல் குறுநகை கோட்டிமென் கமலத்
தரசி ருககுறற் பணணவன் றியானமாற் றுழியிற்
புருவ நாப்பணிற் றோன்றினன் பூவையோா பஙகாய் "

" கொழுதி வண்டிமிர் கொன்றையான் றோன்றிய பின்னர்
அழுத லாலவற் குருத்திர னெனும்பெய ரமைந்த
தழுது தேனின முண்டிடுந் தாமரைக் கிழவன
றெழுது மஙகையோா பாகனை நோக்கினன் றுணிவான். "

இந்தப் பாடல்களில சிவனழுதாரென்றும், அவருக்குப் பிறப்புத்துணியப்பட்டதென்றும் நமதன்பர் கொஞ்சி

யுரைத்தார் மாயா சீதை வெட்டுண்டு மாய்ந்தபோதழுதவ னும், ஜலந்தரனபெண்டைகளவிற் புணர்ந்ததனால் தனது கற்பழிந்ததென்று யானம்பொறு துயிர்துறந்த அவளது பிணச்சாம்பரின்மேல் விடுகாட்டிறசென்று புரண்டழுதவனு மாகிய இவரது விஷ்ணுவின் கதியை யோராமல் எமதப்பன ழுகையை யிழிபொருளிற கூறவந்த தென்னமதியோ? அந் தப்பாடல்களில், "கருணையங்கடல-குறுநகைகோடடி-(பிரமன்) தியானமாற்றுழி (அவன்) புருவாபபணிற் ரோன்றினன் பூவை யோர் பங்காய் - தாமரைக் கிழவன்தொழுது மங்கையோர் பாகனை நோக்கினன்" என்றமைந்தவமைதிகளை இவ்வன்பா சிரதுக் குவாராக இவரது அபிமதம் சிறக்கவேண்டின, "கருணையங் கடலழுதனன் - குறுநகைகோட்டியழுதனன் - பிரமனது தியானத் தில் அவன் புருவமத்தியிறரோன்றியழுதனன்-இடப்பாகத்திலெழுந் தருளிய பூவைகாணவழுதனன் - தாமரைகிழவன் றொழுதவாழ் த்தவழுதனன்" என்று விரித்தியுரையெழுதி விவேகசூடாமணி யாய் வெளிப்படுதலவேண்டும்.மேறபிரயோகஙகளழுகையை த்தூரததமியலபினவாயமைநதுகிடதத லறிஞாக்கு விளகக ம.பிறரழுகையைத் தவிர்க்கவேயனரோ கருணைததுமபுவது? குறுநகையுடையான அழுதிடல் யாங்ஙனம? பிரமனது தி யானத்தில, தியாதாவாகிய அவனுககுத் தியேயவஸ்துவாய் அவனது (தியானஸ்தானமாகிய) புருவமத்தியில ஆவிர்ப்பவி த்த வமலமூாத்தியி னழுகை இழிவேறபது யாஙஙனம? தியானிககிறவன் குறைவுடையவனுவன. அநதக குறைவை யகறறுதலே தியேயமூாததியின துதன்மை.அத்தன்மை யழு கையாயெழுமானல, அது பரப்பிரயோஜனததராம. எம தப்பன் ஞானசமபநதனழுதருளியதை "கேதநெறி தழைத்தோ ங்கமிகுசைவத் துறைவிளஙகப்-பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலாந்தழுத" என்று விளக்கினா பெரியோா. இதுபோற கொள்ளாக்காற் றாமரைககிழவன் மஙகையோா பஙகனைத் தொழுதிடல ஸம்பாவிதமோ? மஙகைபாக னழுதபோது மங்கையேனோ அழாளாயினள்? தியானமாாக்கத்தி லுபாசிக்

கின்றவர்களுக்கு வெளிப்படுந் தியேயவஸ்துவை "ఉమాస హాయం పరమేశ్వరం ప్రభుం - త్రిలోచనం నీలకంఠం ప్రశాంతం । ధ్యాత్వా ముని ర్గచ్ఛతి భూతయోనిం - సమస్తసాక్షిం తమసః పరస్తాత్" என்று கைவல்ய சுருதி அடையாளமிட்டுக் கூறியது. "குவளைக்கண்ணி கூறன்காண்க - அவளுந்தானுமுடனே காண்க - பரமாநந்தப் பழங்கடலதுவே" என்று ஸ்ரீவாசகத் திருமுறையு மினிது பிரகாசப்படுத்தியது. இவ்வதிசயப்பாடு போதர வெளிவந்த காசிகாண்டத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு கபோதியுரை பகர்ந்தவனைப் பரிணியேனுங் கண்டிறந்து பிராதத்துக்கலுழ்ந்தனைமை யொழிந்து சுகிப்பாராக. இன்னுமிவரது அழுகைப்பொருளைக்கேட்டால், பின் வெண்பாவாலதனைத் தவிர்க்கலாம்

"அழுதா னுருத்திர னென்றுமா லின்றுன்பப்
பழுதா லிரங்குதலும் பண்பாம் - அழுதானே
வேறொருத்தன் பெண்டை விரும்பி யிடுகொட்டில
மாறுரைத்தாய் நீயே மதி"

என்னு மிதனை யாம் செய்த "சிவதத்வசிந்தாமணியிற்" காண்க. இந்த நூல் பிள்ளைப்பெருமாளையங்கார் செய்த "பரப்பிரம விவேகத்தை" யழித்த பாசுபதாஸ்திரமென்றறிக.

இன்னுங் கொஞ்சமுரைக்கின்றோம். சிவனழுதது தன் பொருட்டழுகையானால், அது அவருக்குக் குறைவு. தியேயராகத் தியானத்தி லுதித்தவர்க்குத் தன் பொருட்டழுகை செல்லாது. பிறர்பொருட்டான அழுகை அதுவென்லே சிறக்கும். அழுகை பிள்ளையழுதபோது தாய் கண்டிரங்குதலும், தாயே தனது துன்பத்தாலழுதலுமென இருவகைத்து. ஆண்டெம்பெருமானழுதது பிள்ளைநோய் கண்டு தாயழுதது போலாம். பிரமன் சிருட்டித்தொழில் தனக்குக் கற்பிக்கவே சிவனைத் தியானித்தனன். இன்னுஞ் சிருட்டி தொலையவில்லையே. உயிர்கள் மலவலிமேலீட்டாற் படுந்துன்ப மின்னு

மொழிந்த பாடிலல்லையே யென்றிரங்கின்மையே அவாதழுகை யாம். பிள்ளையினது நோயகண்டு தாயழுதது அஞ்ஞானத் தால். உயிர்களது மலவலிநோக்கிச் சிவனழுதது மெய்ஞ் ஞானத்தால். நித்திரை - அஞ்ஞான நித்திரை ஆநந்தநித்தி ரை யென்று விளங்குமாறுபோல இதனைக்கொள்ளத்தக்கது சிவபரஞ்சுடர் தனது திருக்கண்களினின்றுஞ் சிந்திய நீர்த்துளிகளே ருத்ராக்ஷமாக முளைத்தனவென்று ஜாபாலா திசுருதிகள் கூறுமுண்மையும் இதனை நிறுத்தும். விரிக்கிற் பெருகும்.

இனி யெமது உமாநாதன பிரமனது நெற்றியிலாவிர்ப் பவித்ததைச சிவாகள் ஜநநமபோலக்கொண் டிங்ஙிதமபேச வந்த இழிவுரைக்குஞ் சிறிதிறை தநதொழிப்பாம். இவா கா ட்டிய பாடலகளில, பிரமனது புரூமத்யஸ்தானததில, (அ வன தியானித்தபோது) கருணையங்கடல குறுநகை கோ ட்டி மங்கைபங்கனாயத் தோன்றினன் என்று வெளிபபடை யாசத் தியேயவஸ்துவினிலக்கணததை இனிது போதிததிரு க்கவும், இவர் அநயதாகிரகித்தது அவற்றின் பொருள்விளங் காத காரணமேயாம. இவரது மதத்தில் தியேயவஸ்துவினி லக்கணம் பெறபபட்டவாறில்லை நாராயணோபநிஷத்து இவரது விஷ்ணுவை "నారాయణపరో ధ్యాతా" என்று சாபபடு த்திவிட்டது. சிவனைத் தியானிக்கின்றவன் என்பதே அதன் பொருளாம. காசிகாண்டம பிரமனைக்கூறியவாறு நாராய ணோபநிஷத்து விஷ்ணுவைக் கூறிவிட்டது. தியாதாக்க ளது ஜநநமரணதுஸ்தரங்களைப போக்க வெழுந தியேய வஸ்துவினது ஆவிர்ப்பவந்தைபு மோர் ஜநநமென்று துணி ந்த பண்டிதரது மதுகைக்கு நாராயணனே கூலிகொடுக்கத் தக்கவன். மலவலிகொண்டு பிறக்குமோர் ஜீவன் கருணையங் கடலாய்ப் பிறக்குமோ? குறுநகைகோட்டிப் பிறக்குமோ? மங்கைபங்கனாய்ப் பிறக்குமோ? பிரமனது தியானஸ்தா னத்தில் தியேயமூர்த்தியாய்ப் பிறக்குமோ? தாமரைக்கிழ

வன் தொழுதுவாழ்த்திடப் பிறக்குமோ? இவ்வாறு விபவஸ்தையுண்டாக விசாரியாததோஷமே நமதன்பரை அஸமகாத்மவாதத்திலிழிந்து அல்லலுறச் செய்தது. இனியேனுஞ் சீர் தேடிக் கொள்வாராக.

இவரெப்படியாவது இராமனைக் கரையேற்றப் பார்க்கிறார். அது முடியாதகாரியம் ஏனெனின், “மாதாவுதரத்திற் றங்கியுதித்த இராமகிருஷ்ணாதி அவதாரங்கள்போன்றதன்று பிரமனது நெற்றியிலெழுந்த உருத்திரமூர்த்தம் எனில், விஷ்ணுவினது திருவவதாரங்களியாவுமே அயோநிஜம் - அப்பிராகிருதம்-சுக்லசுரோணித சம்பந்தமன்று, இச்சாமாத்திரையானெழுந்த ஜோதிசொரூபம்” என்று பிரசங்கித்துச் சில பிரமாணந்தேடியொப்படைத்தார். அந்தப் பிரமாணங்களைப் பின் விசாரிப்போம். இப்போது இவரது நியாயாபாசவன்மையைச் சிறிதெடுத்துக் காட்டுவோம். சிவன் பிரமனது நெற்றியிற் றோன்றியது இராமகிருஷ்ணாதிகள் கர்ப்பயோநிசம்பந்தம் பெற்றதுபோலாமோவென்று இவரேயாசங்கையெழுப்பிக்கொண்டு இராமகிருஷ்ணர்கள் அயோநிஜர்கள், அவர்கள் அப்பிராகிருததேகிகள் என்று கூறி மகிழ்ந்தார். முதலிலே தோஷங்கூறிய சிவனாரது அவதாரத்தை இப்போது கௌரவமாகவொப்பியவாறென்னை? “ஸ்ரீராமபிரான் கோசலாதேவியின் நெற்றியில் அவதரித்தனன்” என்று இவர் பிரசங்கித்திருக்கிறார். கோசலையின் முகத்திற் பிறந்தான் இராமனென்று தேடிய நவீனசித்தாந்தம் நிலைக்கலையன்றோ? பிரமன் முகத்திற் பிறந்த சிவனை இப்போது லேசாக விட்டுவிட்டார்? இவரது பாரபட்சமான சமாதானத்தால் எமது சிவபரஞ்சுடர்மேலிவரேற்றிய தோஷமிறங்கியதேயன்றி இவரது தெய்வத்துக்கு இவரேற்றிய கௌரவம் நிலைபெறவில்லை. இராமனைப்பற்றிய நூல் இராமாயணம். இதில், இராமனுக்குக் கர்ப்பயோநிஸம்பந்தங்கள் கண்டாகோஷமாய் முழங்கப்படுகின்றன. பிரதானமாகிய வான்மீகத்தின் மாத்திரமேயன்றி வேறு ராமாயணங்களிலும், நமதன்பருக்குப் பிராணபதமாகிய தமிழிராமாயணத்திலும்

(கம்பராமாயணத்திலும்) இராமன் பிறந்தவிடம் கோசலை யின் நெற்றியென்று காணப்படவில்லை. இத்தனை நூல்களின் கண்ணையும் மறைத்துவிட்டு நமதன்பர் கண்கட்டிவித்தை காட்டியது எங்ஙனே நிலைக்கும்? சிவன் பிரமனது நெற்றி யிற்றோன்றினன். இராமன் தசரதனது நெற்றியிலேன் பிற க்கவில்லை? பெட்டைமுகத்தைத் தேடிக்கொண்டது பெரு மையோ? பிரமன் முகத்திற் பிறந்த சிவன் அவனுக்கு அநுக்ரகம் பண்ணிவிட்டு உடனே மறைந்தனன். இராமன் உடனே மறையாமல் ஆகாரம் - நித்திரை - மைதுனங்களைத் தாங்கி யநுபவித்து, சத்துருப்பத்தாற் குரங்குகள் காலையெல் லாங்கட்டிக்கொண்டழுது காடுமேடெல்லாந் திரிந்து சரயு நதியில் வீழ்ந்திறந்து முடிவுபெற்றவாறென்னை? இதற்கு மத்தியில், பூதங்கொண்டுவந்து கொடுத்த பாயசத்தை போ கும் கதியென்னை? நமதன்பரது பிரசங்கத்தால் இராமன் முக்யமாயக் கோசலை மகனாகிறான்; அவள் கணவனை யநு சரித்து தாசரதியுமாகிறான். இவ்விருவர் மகனுவதோடு பூதத் தின்றிருமகனுமாகின்றான், இவனிடத்தில், செரிக்காதவிஷய ங்களையெல்லா மேற்றிச சிந்துபாடினால் யாவ ரங்கீகரிப்பவர்? இதனால் சிவனது தோற்றம் போன்றது இராமனது தோற் றம் என்ற வழுவாசகம் ஜீவிக்க இடம் பெறாதழிந்தது. இரா மனுக்குப் பெட்டைமுகத்தைக் காட்டியதுபோலக் கிருஷ்ண னுக்கு மொன்று காட்டாமல் வாய்பொத்திக்கொண்டாரி தெனகொலோ? கிருஷ்ணன் கர்ப்பயோநிகளைப் பெற்றுப் பிற ந்திடல் தோஷகரஸ்தமாகாதுபோலும். சிவன் பிரமன் முகத் திற் றேவியோடாவிர்ப்பவித்ததுபோல இராமனுந் தேவி யோடு கோசலை முகத்தில் ஏன் ஆவிர்ப்பவிக்கவில்லை? இரா மனது தேவி யார் முகத்திலாவிர்ப்பவித்தனள்? அவளுக்குக் கர்ப்பயோநிசம்பந்தங்கள் தோஷக்ரஸ்தமாகாதுபோலும். இப்படியே விஷ்ணுவினது ஏனையவதாரங்களின் கர்ப்பயோ நிஸம்பந்தங்களுக்கும் நமதன்பர் கதி காட்டுவாராக.

இனி இவர் தேடியபிரமாணங்களைச் சிறிது ஆராய்வாம். இராமனது அவதாரம் அயோநிஜம்-அப்ராகிருதம-சுக்லசுரோணிதசம்பந்தமன்று - சோதிசொரூபம என்று கூறிய பிரமாணங்கள் இந்லடியிற போந்தனவாம

"இராமபரத்வ நிர்ணயோபநிஷதது
இராம ப்ரஹ்மோபநிஷத்து
ப்ரஹ்ம நிர்ணயோபநிஷதது
இராமதாரக ப்ரஹ்மோபநிஷத்து
தத்வ நிர்ணயோபநிஷத்து
பாரமார்த்தோபநிஷதது
மந்திரஸாரப் பிரகரணம்
சதுர்வேதசிகை
இராமதாரகோபநிஷதது."

என்று கோவையாக அசத்வாக்கியங்களைத் திரட்டி இவருக்கு எழுதிக்கொடுத்தவனயாவனே அறியேம. அவன் வார்த்தையை நமபி இவர் மதிமோசம போயினர். உபநிஷத்துக்கள் நூற்றெட்டென்று வைதிகாகள யாவருமொபபியிருக்கிருாகள. அந்த நூறறெடடுபநிஷத்தும தெலுஙகு-கிரந்தம்-நாகரமென்னுமஎழுத்துககளில அச்சிடபபடடிருககின்றது. இந்த வுபநிஷத்துக்கோவையில் பூாவபட்சி யெழுதிக்கொண்ட வுபநிஷத்திலொனறுங்காணேம. இவரொருகால ஆயிரத்தெட்டுபநிஷதது்க்கோவையில் அவை யிருக்கின்றனவென்று வாதிக்கலாம. மத்வர்கள் "ததுத்தம காட்டராயணே - ததுத்தம் மாட்டராயணே" என்று தஙகள் நூல்களில எழுதிககொண்டிருக்கிறாகள். அவைபோலவனவாகவே இவையுமொதுங்கும்.ஆயிரத்தெட்டுபநிஷத்துக்களடங்கியஒருபநிஷதது ஏட்டுப்பிரதி இப்போது கிடைக்குமா? ஒருபிரதி மாத்வன் காட்டியதாகக் கொள்வோம். அதில், சைவ ஸ்மார்த்த வைஷ்ணவர்கள் கொண்டாடுமெ பெயாகளில்லாவிட்டால மாத்வனது பிரதி பொயயென்று தள்ளுவார்கள். இபபடியே தத்தமக்

குரிய உபநிஷத்தின் பெயர்கள் காணுவிடின், சைவன் காட்டிய பிரதியை மற்றையரும, ஸ்மார்த்தன் காட்டிய பிரதியை ஏனையோரும, வைஷ்ணவன் காட்டிய பிரதியைப்பிறரும் பிரக்ஷிப்தமென்றொதுக்குவார்கள். இவ்வெல்லாமதஸ்தருமொப்பக்கூடிய வோரேவிதமான (ஆயிரத்தெட்டுபநிஷத்துக்களடங்கிய) பிரதிகளைத் தனித்தனி யொவ்வொருவருங் காட்டிச் சபையேறமுடியாது. ஸாவஸம பிரதிபந்நமான உபநிஷத்துக் கோவையிற் காட்டமுடியாத பொய்யுபநிஷத்துப் பெயர்களை இந்தப் பூர்வபக்ஷியார் பிரஸ்தாபித்துவிட்டதனுலேயே எம்மனோர் பிரமியார்கள். இராமனுக்கு ஏற்றமுமுண்டாகாது. பூர்வபக்ஷியினது தலைவனைவும் நிமிரப்போகிறதில்லை. நூற்றெட்டுபநிஷத்துககோவையோ ஸாவஸமபிரதிபந்நமாய் வைதிகாயாவரிடத்துங் காணப்பட்டு பூஜ்யமாய் வழங்கப்பட்டு வருகின்றது இதில், "இராமதாபநியுபநிஷத்து - இராமரஹஸ்யோபநிஷத்து" என்று இராமநாமாங்கிதத்தோடு இரண்டுபநிஷத்துககள் பிரகாசிக்கின்றன. இன்னும் வைஷ்ணவோபநிஷத்துககள் பல இருக்கின்றன. இவற்றுளொன்றிலேனும் இராமன் கோசலையின் நெற்றியிற் பிறந்தானென்று பொய்யுபதேசம் செய்ததில்லை. அன்றியும உபநிஷத்துக்களுககுப் பொருளுரைககவேண்டியது உபப்ரஹ்மணங்களைக்கொண்டு. இவருத்தரித்த உபநிஷத்துக்களுக்கு உபப்ரஹ்மணமான புராணேதிகாசங்கள் யாவை? ஒரு புராணத்திலும, இதிகாசமாகிய பாரதராமாயணங்களிலும பெறப்படாத கோசலை நெற்றியை இராமனுக்குப் பிறப்பிடமாகப் பொய்யுரைபுனைந்து பொங்கிவழிந்த பூர்வபக்ஷி வித்வசபைகளி லினி யெப்படித் தலைகாட்டுவாரோ தெரியாது. இராமனுக்கு அதிஷ்டானமாகிய விஷ்ணுவை வேதமானது "వాసుదేవః పరః ప్రకృతిః" என்றும், புராணமானது "ప్రకృతిః పరమో విష్ణుః" என்றும் பண்டிதபாமரரஞ்ஜிதமாய்க் கூறியிருக்கும்பகுதிகளை மறுப்பா

ரில்லை. பிரத்யக்ஷசுருதியாதிகள் விஷ்ணுவைப் பிரகிருதி யென்றும், "யோநிஜநார்த்தநः" என்றும் பிரகாசப்படுத்தியதுணர்ந்தவர்கள் இராமகிருஷ்ணாதிகளை அப்பிராகிருதவிக்ரகங்கள், சுக்கிலசுரோணித பரிணாமதேகமெய்தாத ஜோதிசொரூபர்கள் என்று எங்ஙனே ஸ்தாபிக்கத்துணிவார்கள்?

இனிச் சிவபரஞ்சுடரை வேதாதிகள் "அஜம்த்ருவம்" என்றும், "அஜாதவத்ஸம்" என்றும் பிரகாசப்படுத்தின. சுவேதாசுவதரம் "நதஸ்யகச்சித்ஜநிதா" என்று தொடங்கிச் சிவனது பிறப்பின்மை முதலிய பதிகாமதத்தை நன்குபரிஷ்கரித்தன. ஆனாலுராட்சிகளெண்ணிலவேனும் ஸ்ரீ காளமேகப் புலவர் "பிறப்பிறப்பிலே" என்று சிவனுருக்குஞ் சிட்டுக்குருவிக்கும் ஸாமயாதிசயங்கூறிக் களிப்பித்தனர். சிவனுருக்குப் பிறப்பு-இறப்பு இல்லையென்றும், சிட்டுக்குருவிக்குப் பிறப்பு இறவாணதிலென்றும் பொருள்விளங்கவமைத்த அருமையை அவர் விஷ்ணுவினிடம் ஸமாததிதிருந்தால நம தன்பரைக் கையிற பிடிக்கலாமா? இனி விஷ்ணுவின் கதியைப பராங்குசமலலையபேதவரென்னும் பண்டிதர் பின்வருமாறு கூறுகின்றார்.

"பிறப்புணடென்பதற்கு ஸ்ரீஜயந்திசாட்சி, பெருஞ்சமுசாரமுணடென்பதறகு மறப்பில சீதைசாட்சி மரணமுணடெனபதற்கு வனவேடன சாட்சியுண டிதுவாய்மையே" எனனுமிதனை மறுக்க யார்தாம்? சிவனா பிரமனமுகததி லாவிரபபவித்ததைக் காமாதீனமான வொருபிறபபு எனறு கொண்டால், அந்தப பிறபபுக்கு இறப்புக்கூறவேண்டும். அவர செத்த கதை கேட்டிருந்தால வாய்திறக்கட்டும். இராமகிருஷ்ணாதிகள் செதத்கதைகள் ஜகத்பிரஸித்தம. நரசிங்கம் சரபத்தாலழிந்ததுபோல மீன-ஆமை-பனறியாதி அவதாரங்களும் கணபதி-சுப்பிரமணியர்-பைரவர் முதலிய சிவஸூநுக்களாலழிந்தன. (சரபத்தையழிக்க நமதன்பர் கண்டபேரண்டத்தைத் தேடியதுபோல மத்ஸ்யாதிகளையழித்த சிவமூர்த்

தங்களுக்கும் இடர்விளைக்கத்தக்க விஷ்ணுஅவதாரங்களை ஏனோதேடி யொப்படைக்காராயினர்? நரசிங்கத்தின ன்றலை யுரித்துத் தரித்ததுபோல மீனினது கண்ணைப் பிடுங்கியும், ஆமையினது ஓட்டைப்பறித்தும், பன்றியினது கொம்பையுடைத்தும, திரிவிக்கிரமனது முதுகெலும்பை முறித்தும் சிவனார்தரித்திருக்கும அடையாளங்களைக் கண்டேயன்றோ “ஏவம்விஷ்ணுமயம்ஸதாசிவம்” என்று மேலோர் துதித்தனர்.

இதனையே இரட்டையர்கள தமதுதெய்வவிகவுலாவில “துணையெனவே யாழிபுகுஞ் சோமுகனைச செறறிடுமீன-கணணையு கிராற்கனைந்தவரார, கண்ணனார்-ஆமைவடிவந்தனினு மாநிவராகந்தனினு-மாமுதுகோட்டைக்கரததால வாங்கினாரா, தாமறையும் பேசரிய சிமபுளாயப் போரடகனையடுங்-கேசரியை வளளுகிராற கீண்டவரார” எனவும, “படிவிண முழுதளநத மாயன முதுகெலுமபைச்செங்கீ-ரமுகவே வாஙகினார வேறணடோ” எனவுங்கூறிச சாஸநமபண்ணினாகள. இவைகளுககுச கதிகூறவகையறியாத பூர்வபடசியாருககு இனனுமொன்று சொலலுகிறோம்.

எனனெனின, பிறந்து சாகிற வாழ்வினையுடைய விஷ்ணுவின்கதியை எமது பராங்குசயலலையதேவா பினனு முரைத்திருக்கின்றனா. விஷ்ணுவை யாரோ வ்யவஹாரமூர்த்தியென்றாாகளாம. அது சகியாமல “குறறததால் முனபெறற பத்துப்பிறவியினுங் கூற்றுன்வந்து-வந்து தன்னுயிரை, மிகப்-பறறிக கொண்டேபோகும் அரியே கொலவானென்றல பதியெயாரிசமூார் குண சீலனே” என்று கூறிய அருமையே அதுவாம. இவைகளை யோசிக்கும ஸாதுக்கள் பிரமனது நெற்றியிற் றோனறியது சிவனுக்குப் பிறபபாகாதோ என்று தொடுத்த வாதத்தின் முகத்தை இனிச் சுட்டெரிப்பது அருமையோ? சிவனார் பிரமனதுநெற்றியி லாவிர்ப்பவித்தா ரென்பதனுண்மையை இனிச் சிறிதுவிளக்குவாம்.

ஆதித்யபுராணம் "త్వామేవపుత్రమిచ్ఛామి. త్వంయామిసదృశంసుతం. త్వన్మాయామోహితశ్శంభో-నవేద్మిత్వాంపరంశివం" என்னும் வசனத்தால், ஹேபரமசிவா! தேவரீர் எனக்குப் புத்திரராக வரக்கடவீர் என்று பிரார்த்தித்து, உம்முடைய மாயையால் மோகிதனாகியநான் உம்மைப் பரமசிவனென்று தெரிந்துகொள்ளாமலிருக்கிறேன் என்று பிரமன் விண்ணப்பஞ் செய்துகொண்டானென்று பெறப்பட்டது அதற்கு "అహంతేనభవతా-పుత్రస్సపితామహ॥" என்னும் வசனத்தால் உனக்கு நான் எனது அம்சத்தால் புத்திரனாய் வருகிறேன் என்று பரமசிவன் சொன்னதாகவெளிப்பட்டது. அன்றியும், "తపస్తతాపపరమం-నకించిత్ప్రత్యపద్యత, గతేబహుతిథౌకాలే-స్వయంభూః క్రోధమూర్ఛిత, ప్రాణాత్మకసముద్భూతో-లలాటేబ్రహ్మణోహరః" என்னும் ஸ்காந்த வசனத்தால் பிரமன் அநேககாலந் தவஞ்செய்தும் அவனுடையதவம் பலியாமையால் கோபத்தால் மூர்ச்சித்தான், அப்போது பிராணாத்மகராகிய ஹரன் என்னும் உருத்திரமூர்த்தி அவனுடையலலாடத்தில் ஆவிர்ப்பவித்தனர் என்றும், "లలాటేచింతయేద్బ్రహ్మా-తపస్యుగ్రేవ్యవస్థితః, తల్లలాటాదభూచ్ఛంభుః-సృష్ట్యర్థం తన్నమోహితం" என்னும் வசனத்தால் மகத்தான தவத்தையுடையவர்கள் முகத்திற்குமேலாயிருக்கிற லலாடஸ்தானத்தில் பிரமத்தைத் தியானிப்பார்கள். அப்படிப்பட்ட தன்மையிற்சிறந்த பிரமனது நெற்றியினின்றும் ஸ்ருஷ்டியின் பொருட்டு உருத்திரமூர்த்தி ஆவிர்ப்பவித்தனர் என்றும் வெளிப்பட்டது. இந்தப்பிரமாணங்களைப் பரியாலோசிகையில் பிரமனிடம்பிறந்த உருத்திரர் குணருத்ரரே எனவும், அவரும் பிரமனுக்கு அநுக்ரஹார்த்தமே யாவிர்ப்பவித்தனரெனவும், அவருக்கும் துரீய சிவனுக்கும் நாமரூபவொற்றுமைகளாற் பேதங்காணாமையால் அவரையே சிவனாகக்கொண்டு சிலவிடங்களில் வேதாதிகள் கூறுமெனவும், பிரம விஷ்ணுவாதிகளும் அவரையாச்ரியிப்பதுகொண்டு அவரையதிஷ்டித்துவிளங்கும் ஸ்ரீபர

மேசுவரப் பிரஸாதத்தை யடைவதுண்டாகையால், அந்தக் குணருத்ரோபாஸ்திக்கு அதிகமாகப பிரம நாராணயர்களுபாஸ்தியை வைதிகோததமர்கள் கொள்ளமாட்டார்களெனவும் அறியத்தக்கது. இவ்வுண்மைகளாலும், "பிறப்பில் பெருமானைப்-பின்றாழ்சடையானை" எனவும, "பிறப்பொழிவேன் பிறவாவுருவானை" எனவும போந்த சைவத் திருவாளர்க ளமுதவாக்காலும சிவனா பிறந்தாரென்னும் வாதம் இறந்துவிட்டதாகையால "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண்மனவாளசெங்கீரையாடியருளே" என்பதைச சிந்தித்து இனியேனுங் குணபபட்டு வாழவாராக. விரிககிற் பெருகும்.

நமதன்பர் இம்மட்டிலமையாமல் பகவத்கீதையி லிறங்கினர். ஷை கீதை எ-வது அத்தியாயம உச வது சுலோகத்தில் "பிரபஞ்சாதிதனும் ஜகத்ரக்ஷணர்த்தம லீலையினாலே பிரகாசிக்கின்ற பலவித ரூபமுடையவனும சுத்த சத்துவ சொருபனுமாய் இருக்கின்ற என்னைக் கருமத்தினாலுண்டான பாஞ்ச பௌதிக தேகத்தையுடையவனும தேவதைகளுக்குச சமானனும் நினைக்கின்றார்கள்" என்று கண்ணன் சொன்னதாகப பெறப்பட்டிருக்கிறதாம.இதனை ஸ்ரீதரஈவாமிகள வியாககியானத்திற்பார்க்கும்படியும நமது பூரவபட்சியார் தெரிவிககிறார். அன்றியும, கூ-வது அத்தியாயம சக-வது சுலோகத்தில் "என்னுடைய சிரேஷ்டமான ரூபததை அறியாத மூடாகள் ஆத்மகோடிகளுக்கு ஏகநாயகனாயிருககிற என்னை மனுஷ்யதேகத்தை யெடுத்திருப்பவனாக மதிககின்றார்கள" என்று கண்ணன் கூறியதாகப் பெறப்பட்டிருககிறதாம். இதனையும் நமதனபரெழுதிக்காட்டிக் கண்ணன் பரமாத்மாவென்று ஸ்தாபிககிறார். எடுத்துககொண்ட சுலோகங்களுக்கு இவரெழுதியவுரை துரைசாமிமூப்பனா வெளியிட்ட "பகவத்கீதை வசனம்", என்னுஞ் சுவடியிலிருநது எடுத்துக்கொண்டதெனவறிக. இந்தமூப்பனார் தமது சிவத்ரோகத்தை ஷை சுவடியில் விஸ்தாரமாய்ப் பரப்பியிருககிறார். அதனையுஞ் சமயம்வாய்த்தபோது விசாரியாமல்விடோம். அது நிறக.

## ஆஞ்சநேயராமவைபவபங்கம். சாடு

நமதன்பரது இரண்டுவசனங்களுக்குங் கதிகூறுகின்றோம். பாரதத்திலொருகூறு கீதை, இந்தக்கீதையும் பாரதந்தான். இனிப்பாரதம, "జన్మకర్మతపోయోగా-స్తథా స్తవచ పుష్కలాః, తేభ్యోలింగార్చితశ్శంభుః-త్వయార్చాయాంవిశేషతః" என்று கூறுகின்றது. இதில வியாசரானவர் அசுவத்தாமாவைநோக்கி, சௌமிய அசுவத்தாமரே! கிருஷ்ணார்ஜுனர்களுக்கு எவ்வாறு உற்பத்தி-கர்மம-தபசு-யோகங்கள் கிடைத்திருக்கின்றனவோ, அவ்வாறே உமக்குங்கிடைத்திருக்கின்றன. அந்தக் கிருஷ்ணார்ஜுனர்கள் சிவலிங்கத்தினிடமாகப பரமசிவாராதனஞ் செய்கின்றார்கள். நீர் விக்கிரகவடிவத்தில ஆராதனஞ்செய்கின்றீர் என்று கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனைப பரிஷ்கரிக்கையில் கிருஷ்ணருக்கு ஜன்மம கர்மம தபசுகள்-கேட்கப்பட்டன. இப்படியே அசுவத்தாமார்ஜுனர்களுக்குங் கேட்கப்பட்டன. இவை ஜீவதருமம. இவைகளையுடையவர்கள் ஜீவர்கள். மூன்று ஜீவர்களை யோரினப்படுத்திக் கூறினமையால ஒருவரிலொருவர் உயர்ந்தவரும் தாழ்ந்தவருமாகார். ஜன்ம கர்ம தபசுகளிலிவரொத்தவராயினும சிவாராதனையில் விக்ரகபூஜைசெய்யும் அசுவத்தாமரைநோக்க இலிங்க பூஜை செய்யும கிருஷ்ணார்ஜுனர்கள் உயர்ந்தவர்களாயினது சத்தியம. ஜன்மகர்மங்களை யொப்பிய இந்தவசனத்துக்கு ஒருகதி தேடாமல், இதனோடுமுரண்பட வெறுமனே ஏகதேசவசனங்களை யுதகரிப்பதி லென்னபயன்? பாரதமொன்றிலேதானே கிருஷ்ணனை மனுஷ்யனல்லவென்றும், கர்மாதீனமான மனுஷ்யனென்றுங கூறியிருத்தலுக்கு இபபோது கதிதேடவேண்டியதே முக்யம. இன்னும, பாரதம "నైవతస్యాంతకోంతం మాహి తామసమాయయా, తస్యోహంస్యాత్ స్వోమూలం - జ్ఞానేనస్యాత యానుతం" என்று கூறுகின்றது. இதில், கிருஷ்ணமூர்த்தி அப்படிப்பட்ட தெய்வத்தை எனதுமாயையால் மோகித்திருக்கிற பாஷண்டிகள் பார்க்கவறியார்கள். ஆகையால்,

என்னுத்மாவுக்கு மூலகாரணரென்று சகலருக்குந் தெரியப் படுத்துகிறவனாக அந்தசிவனை நான் பூஜிக்கின்றேன் என்று சொன்னதாக வெளிப்படுகின்றது. சகலருந் தெரியாமையால் எனக்கு அந்தராத்மா கிடையாதெனறும், நானே அந்தராதமாவெனறும பிராந்தியடைந்திருப்பதால், அதை நிவர்த்திக்கும்பொருட்டே நான் சிவனை எனனுத்மாவென்று பிரசித்தப்படுத்துகிறேன என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் பரிஷ்காரப்படுத்திய இந்த வசனத்துக்குமுன்னே நமது பூர்வபக்ஷி தேடியவசனங்கள் நிலைபெறுமாறு யாங்ஙனம்? ஆயின், கீதாவசனங்களுக்குப் போக்கென்னை யெனின், கீதை பீஷ்மபாவத்திலுள்ளது. இந்தக்கீதையை நாம சத்தியமாய்க் கொண்டால், பீஷ்மத்துரோணுதிகளும சத்தியம். துரோணத்தில கிருஷ்ணனும, அர்ஜுனனும கைலாசயாத்திரைசெய்ததை வியக்தம. யாத்திரையில, பசியால வருந்திய அர்ஜுனனுக்குக் கிருஷ்ணர் சிலகிழங்குகளையுங் கனிகளையுங் கொண்டுவந்து கொடுத்தார. அதற்கு அர்ஜுனன் நான பூஜையைக் கொண்டுவரவில்லையே! பூஜையின்றி நான் எப்படி ஆகாரங்கொள்வது என்று மறுத்தான். அதனை மறுக்கவஞ்சிய கிருஷ்ணர் சிவபூஜை பாவனையேயாகையால், என்னிடத்திற சிவபாவனை செய்து பூஜிக்கக்கடவாயென்று கூறினார. அந்தப்படியே கிருஷ்ணரிடத்திற் சிவபூஜை செய்தான அர்ஜுனன. இப்படியே சாங்கானுஞ் சிவபூஜை செய்திருந்தான. இவைகளுக்குக் கதியென்னை? அன்றியும, கண்ணன "ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేర్జున తిష్ఠతి, భ్రామయన్సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా. తమేవశరణంగచ్ఛ సర్వభావేన భారత, తత్ప్రసాదాత్పరాం శాన్తిం స్థానంప్రాప్స్యసిశాశ్వతం" என்று கீதையிலேயே பிரகாசப் படுத்தியிருக்கின்றனர். இதில், தனக்கு வேறுயுள்ள ஈசுவரனைப் பிரஸ்தாபித்து, அர்ஜுனா! நீ அந்தப் பரம புருஷனையே சரணடையக்கடவாய. அவருடைய பிரஸாதத்தால் சாசுவதமான (அவருடைய திருவடிப் பேறுகிய)

மோக்ஷஸ்தானங் கைகூடும் என்று உபதேசித்ததைப் பூர்வபட்சிகள் கிலுஷ்டகல்பனம் பண்ணிக் கேடுசூழப்பெறுகின்றார்கள். ரச்சப்பத்ததினுலே பட்டாக்கையிட்டத்தனுக்கு ஈசுவரனை விளக்கியதுமாத்திரமேயன்றி "ఉత్తమః పురుషస్త్వన్యః" என்பதில், உத்தமனும் புருஷனுமாகிய அந்தப் பரமேசுவரனை "அஹ:" என்றுகூறித் தனக்குவேறானவரென்று பரிஷ்கரித்தனர். இவைகளையெல்லாம் யோசிக்கிறபோது பூர்வபட்சிமேற்கொடிய வசனங்கள் கண்ணனை ஸோஹம்பாவனையாற் கூறியவையென்பதே அமைவுடைத்து. வாமதேவரிஷி "யானே எல்லாமாயினேன்" என்றும், இந்திரன் "நானே பிராணனாயிருக்கிறேன்-நானே அறிவுமயமான ஆத்மாவாயிருக்கிறேன்" என்றுங் கூறியிருக்கிறார்கள். ஏனைய கீதாசாரியர்களும், பிரமனர்ப்பு அநுமான முதலியோரும் கண்ணனைப்போலவே ஸோகம்பாவனை மேற்கொண்டு தாமே பரமாத்மாவென்று கூறுகின்றார்கள். அநுமானது கீதையைத் தெலுங்கர் "கோதிகீத" (కోతిగీత) என்கிறார்கள். சைவவைஷ்ணவ மரியாதையை நாம் பரியாலோசிப்போம். இவர்கள் பெரியோர்களைக் கண்டால் "ஸ்வாமீ" என்று அழைப்பார்கள். ஐயங்கார்சுவாமிகள் ஒருவருக்கொருவர் "பெருமாளே" என்று அழைத்து வந்திக்கின்றார்கள். சாம்பவர்கள் சிவனடியார்களைச் சிவனென்றே வழிபட்டு உய்யும்வழி தேடுகிறார்கள்-கண்ணன். கீதாசாரியனாயிருந்து செய்யு முபதேசஸந்தாபத்தில் தன்னைச் சிவபாவனையாற் கிரகித்துத் தானே ஈசுவரனென்றுகூறியது சைவசித்தாந்த முடிவாயினதறிக. இந்த ஸோஹம்பாவனைலட்சணம் வைஷ்ணவர்களுக்கும், மாயாவாதிகளுக்குந் தெரியாது. தெரிந்திருந்தால் இராமாநுஜாசாரியரும், சங்கராசாரியரும் "స్థానం సామీప్యసాయుజ్యం" என்றபகுதியை ஒருவர்க்கொருவர் மாறுபட்ட நிலைமையுடையவர்களாய்க் கெடுத்திருக்கமாட்டார்கள். இனி ஸோஹம்பாவனை இன்னதென்று பின்வாக்

கியத்தா லுணர்த்துகிறோம். "கண்டவிவையல்லேனா னெனற கன்று காணுக்-கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த, தொண்டினொடுமுளத்தவன்று னின்றகலப்பாலே - சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி, விடைகது மலங்களெலாங் கருடதியானத்தின-விடமொழியுமதுபோல விமலதையு மடையும் பண்டை மறைகளு மதுநானானென்று பாவிக்கசொலலு மதிப் பாவகத்தைககாணே" என்னும இந்தவாய்மைதோன்றவே கண்ணனும கீதையில "𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍" என்று கூறினர். ஈச்வரம=ஈசுவர ஸம்பந்தமான, மே=என்னுடைய, யோகம=ஐசுவரியயோகத்தை, பச்யா= நீபார்க்கக்கடவாய் என்று வெளிபபடுத்தியதுணர்ந்தவர்கள் ஈசுவர சமபந்தமென்றதை ஈசுவரப்பிரஸாதத்தால அவ்வீசுவரனுகப பாவிக்கபபடுந்தன்மை யென்று தெளிவார்கள். இதுபற்றியே கண்ணனை ஈசுவரனென்றும, சிருஷ்டிமுதலிய சாவகர்த்ருத்வமுடையவனென்றும் கீதைமுழுதுங் கோஷிக்கு நிலமையையுணர்ந்திடுவா பெரியோரென்க. சுருதிஸூக்திமாலையில, ஸ்ரீ ஹரதத்தசுவாமிகள் இதனை நனகுபரிஷ்கரித்தனரெனக.

இனி நமதனபா வாமனபுராணம-பிரமாண்டபுராணம-கௌதம சங்கிதை-ஸஹஸ்ர நாமம-தமிழ்க்கூர்மபுராண முதலியவைகளைப் பிரஸ்தாபித்து, அவை விஷ்ணுவினது பிறப்பை அப்பிராகருதம-அயோநிஜம-சுக்ல சுரோணிதமானதன்று என்று கோஷிப்பதாகச் சாதித்தார். இதுகாறும் யாம செய்திருக்கும் பிரசங்கங்கேட்டவர்களுக்கு ஈண்டிவர் காட்டிய பிரமாணங்களில் ஸத்யபுத்தியுண்டாகாதென்க. இவரது பிரமாணங்களில், முதலெடுத்துக்கொண்ட வாமனபுராணம் விஷ்ணுவுக்குத் தசவித அவதாரங்களைப் பிரதிபாதிக்கிறதாம். அவ்வவதாரம் அமிசாவதாரம்-அமிசாமிசாவதாரம்-ஆவேசாவதாரம்-பூரணுவதாரம்-பூரணதமா அவதாரம்-வியூகாவதாரம்-விபவாவதாரம்-அர்ச்சாவதாரம்-விர்த்தியவதாரம்-பூரண

தராவதாரம் என்பவைகளாம். இவ்வெல்லா அவதாரங்களும் அப்ரோஜிஜம்-அப்பிராக்ருதம் என்று பிரஸித்தியெய்தினவாம். இனி யிவ்வவதாரங்கள் அப்பிராக்ருதங்களாகுமானால், யாவும் ஸமமரியாதை யுடையனவாதல் வேண்டும். இவர் பூரணதமாவதாரமெனக் கொண்டாராமனும், ஆவேசாவதாரமெனக் கொண்ட பரசுராமனும் ஒருவருக்கொருவர் சண்டை பிடித்து, பரசுராமனை இராமனுதைக்கவேண்டியவாவசியகமில்லை. இவ்வுதைத்தராமனையும், சாலுவயுத்தத்திலுதைபட்ட கிருஷ்ணனையும் பூரணதமாவதார மெனக்கொண்ட இவர் மீன்-ஆமை-பன்றிமுதலியவைகளைப் பூரணாவதாரமென்று கொஞ்சிமகிழ்கின்றார். இந்த மிருகாவதாரங்களிற் றணிந்தனவாகப் பரசுராமாதி மனுஷ்யாவதாரங்களைக் கொண்டாடிக் கொடிபோடுகிறார். அன்றியும், பூரணத்துக்குமேல் தரதமங்களை யொப்பி, பூரணதமாவதாரம்-பூரணதராவதாரம் என்று ஆபாசமழை பொழிகின்றார். தரதம பாவங்கள் குணத்தின் மேலேறத்தக்கன. வஸ்துவின்மே லேறமாட்டா. மந்தம்-மந்தரம், தீவ்ரம-தீவ்ரதாம் என்பனபோற்கொண்டு தெளிக. சூரியனை நாம கிரகணகாலத்திற்பார்த்து, இது பூரணகிரகணம-முக்காலகிரகணம - அரைககிரகணம - காலகிரகணம்-வீசங்கிரகணம் என்று பிரஸ்தாபிக்கிறபோது அந்தப் பேதங்கள் ஸ்வரூபத்தின்மேரி லேறிவிளங்கும். சூரியனைக் கிரகணம் ஸம்பந்திக்கிறபோதுமாத்திரமே அதுசிறக்கும். அந்த ஸூரியன் பூமியில்வந்து பிறந்தானென்கையில,முழு ஸூரியன்பிறந்தான்என்பது மாத்திரமேபொருந்தும். முக்கால்ஸூரியன் பிறந்தான் என்றுகூறி அவமானப்படுவரோ அறிவிற் சிறந்தோர்? அதற்குமேல ஒன்றரைச் சூரியன் பிறந்தான்-ஒன்றேமுக்காற் சூரியன் பிறந்தான் என்று கூறித தடுமாறிப்போவரோ தக்கோர்? தரதமங்கள் பூரணாவதாரத்திற்கு மேலிட்டனவாகப் பிரசங்கித்தது பகுத்தறியும் பண்பிழந்தமையினாலென்றறிக. பூரணத்துக்கு மேல், தமாவதாரங்களாய்க் கொண்டவர்களில், கிருஷ்ணன்

விஷ்ணுவினது கறுப்புமயிரொன்றின் அவதாரம என்று கூறிய வேதம-பாரதம என்பவைகளை அஸத்தென்று தள்ள இவரது வாமனபுராணவாக்கியம போதித்தலால், அவ்வாமனபுராணவாக்கியத்தை வைஷ்ணவாகள முடைந்துகொணட அஸதவாக்கியமென்றெழுதுகைக்குதலே சிஷ்டர்களபிமதமென்றுணாக. நிறக.

இவரது பிரமாணடபுராணமு மிவரைத்தெருவிலேயே தியங்கவிடடது. எங்ஙனமெனின், அநத வாக்கியத்துக்கு "அரசனே விஷ்ணுவினது எல்லாவ வதாரங்களும் அயோநிஜம் என்று எவவண்ணம் முனிவாகள் சொல்லுகின்றார்களோ, அவ்வண்ணமே உனது பாரியாளான சநதிரமதியும் தாமரைப்பூவில் உதித்தவள் என்று கூறுகின்றது" என்று அரிச்சந்திரனைப பாாத்துப் பிரமதேவா சொன்னதாக இவரே பொருள்விரித்தாா். இதில, விஷ்ணுவினது அயோநிஜத்வத்தோடு ஒத்த அயோநிஜையென்று சநதிரமதி கேட்கப்படடனள். விஷ்ணுவும, சநதிரமதியும அயோநிஜாகள். அப்பிராகிருதர்கள-சுக்ல சுரோணித சமபந்த மெய்தாதவாகள். இவ்விருவருஞ சமநிலைபெறுவாாகளாதலால, சநதிரமதியைக் காட்டிலும விஷ்ணுவுக்குண்டான ஆதிக்யம் யாது? இவரதுவாக்கியம விஷ்ணுவுக்கு ஜீவஸாம்யங் கூறினமையால, விஷ்ணுவைப் பரமாத்மாவென்று மாரடித்துக் கொள்ளு மிவரதுவாதம நிஷ்பலமாயினதறிக. இவரது விஷ்ணுவோடு பாஞ்சாலியுஞ் சேர்ந்து கணம்பெறத் தக்கவளா மென்றுணர்க. இவர் காட்டிய கௌதம சங்கிதையு மிவருக்கு உபகாரஞ் செய்திலது. எஙஙனமெனின், இதில் கோசலையைப் பகவான் தனது யோகமாயையால் கர்ப்பவதியாகச் செய்தார், நாராயணனுக்குக் கர்பபவாசங் கிடையாது என்று பொருள்விளங்குவதாகப் பூர்வபட்சியார் பிரசங்கித்தனர். உலகில மகான்கள் பலா கர்பப மெய்தாதவர்களுக்கு விபூதிபிரஸாதங் கொடுத்தலும்,

மஞ்சள் மந்திரித்துக்கொடுத்தலும், மந்திரசித்தியால்வீக்ஷி
த்து அநுக்கிரகித்தலு மாகிய யோகமாயைகளால் புத்திர
ஸந்தான முண்டாகச் செய்திடலநுபவஸித்தம். குந்திதே
வி-மத்திராதேவிகளுக்குத் தூர்வாசமுனிவர் மஞ்சள்கொடு
த்தருளிய யோகமாயையே யன்றோ புத்ரோற்பத்திக்குக்
காரணமாய நின்றது? இதனால், அந்த ஸதிரீகளுக்குப்
புருஷஸம்பர்க்க மில்லையெனவாவது, பிறக்குஞ் சிசுக்க
ளுக்குக் காம்பயோநிஸம்பந்தமும்-சுக்ல சுரோணித பரி
ணாமதேகமு மில்லையென்வாவது வாதிடல் ஸம்பாவிதமோ?
அதவா அவையில்லாவிடினும், சந்திரமதியோடு ஸாம்யம்
பெற்ற விஷ்ணுவவதாரங்கள் காமாதீன முடையனவாகவே
யொதுங்குமியல்பினவாயினவெனக் சந்திரமதி பார்ப்பானுக்
கும், அவள் கொழுநன் (அரிச்சந்திரன்) பறையனுக்கும் அடி
மைப்பட்டார்கள். அவரின்றிற் படிக்கப்பட்ட இராமன்
(தன்மனைவியை மீட்டுக்கொடுக்கவேண்டிக்) குரங்குகள்வயப்
பட்டும், சீதை இராவணன்வயப்பட்டும் வருந்தினார்கள். இன்
னோ பட்டபாடுகள் தெய்வத்துக்கே வெளிச்சம். இவ்விரா
மன் பாயசத்தாற்பிறந்தவனென்று எல்லா இராமாயணங்களுங்
கூறுகின்றன. இந்தப்பாயசத்தை யொரு பூதங்கொண்டு வ
ந்து கோசலைக்குக் கொடுத்தது. இதனால், அவளுடைய கர்
ப்பம் ஒரு பூதத்தின் யோகமாயையா லுண்டாகியது என்றும்
அந்தப் பூதத்தையே நமதனபாகாட்டிய கௌதமசங்கிதை
பகவானென்று ஒருகால் சொல்லியிருந்தாலு மிருக்கலாமெ
ன்றும் விவேகிகள் தீர்மானிக்கின்றனர். இவைகளுக்குக் கதி
தேடுவதோடு இவரது விஷ்ணுஸஹஸ்ரநாமம் விஷ்ணுவைக்
கௌரவித்தது உபசாரவழக்கென்றுமறிந்து மயக்கொழி
வாராக.

இதற்குமேலிவர் கம்பராமாயணம்-பாகவதமுதலியன
இராமனுக்குக் காப்பவாஸாதிகளை வர்ணித்தது யாதென்று
சங்கித்து, உலகியலை நோக்கி அவ்வாறு கூறியபடியாமென்று

ம், கண்டியாசிரியர் கல்லாடர் முதலியோர் மாதருகர்ப்பவாஸஞ் செய்யாத விநாயகர்-சுப்பிரமணியரிருவரையும் பார்வதீ தேவியார் திருவயிற்றிற் பிறந்ததாகக் கூறியிருப்பதே தமது பட்சத்தை நிறுத்து மென்றும் பிரசங்கித்துத் திருப்தியடைந்தார். இதுவு மஸங்கதமாம். கம்பராமாயணம் இராமனையே பிரதிபாதிக்க வெழுந்தது. இதில், இராமன் புகழைக் கூறாமல் அவனது இகழைக் கூறினன் கம்பனென்றது ஏற்ற ஸமாதானமாகாது. இராமன் கோசலைமுகத்திற் பிறந்ததை முடிவாக அவன் சொல்லியிருப்பானாயின், அத்துடன் காப்பவர்ணனை கூறினனென்றசமாதானத்தையு மொருவாறு அங்கீகரிக்கலாம். நமதன்ப ரபிமதப்படிக்கோசலைமுகத்திற் பிறந்தது மெய்யும், அவனது காப்பயோ நிலம்பந்தங்களைப் பெறறது பொய்யுமாம். முக்கியமாய்ச் சொல்லவேண்டியது மெய். அந்த மெய்யை வாயில் போட்டுக்கொண்டு (சொல்லாமல் விடுத்து) பொய்யை ஒன்று பத்து நூறாகப் பெருக்கிப் பிரகாசப்படுத்தினன் கம்பனென்றது பதியாமா? இதனைத் தெளியாமல கடவுளியலுக்கு விரோதமாக உலகவியலை நோக்கி இராமனை புகழைக் கம்பன் கெடுத்தானென்றது இவர் கம்பனை மூடனென்று தூற்றியபடியாம். தண்டி-கல்லாடர் முதலினோர் சிவஸூநுக்களை சரித்திரங் கூற வந்ததில்லை. அவர்களது பிரபந்தங்களிற் கூறினவெல்லாம் ஸ்காந்தாதி முக்யபிரமாணங்களோடு முரணியவழி யெமக்குப் பிரமாணமாகா. அன்றியும் பார்வதியாருக்கு விநாயகர் முதலியோர் மக்களென்றது ஸர்வஸித்தம். எத்தனையவதாரங்கள் அவர்க்குக் கூறினும், எங்குப்பிறந்ததாகக் கூறினும் "சத்திதன் வடிவேதென்னிற்-றடையிலாஞானமாகும்" என்ற சித்தாந்தப்படி ஞானகனமாகிய திருமேனி கொண்டெழுந்தருளிய அவ்வம்மையினது மக்களாய் அவர் வருவரேயன்றி (இராமன் கோசலைக்கும், கிருஷ்ணன் தேவகிக்கும், பரசுராமன் ரேணுகைக்கும் பிறந்தபடிக்) கண்டகண்ட ஸ்திரீகளுக்கு மக்களாய்ப்பிறந்து தெய்வவியல்

கெட நில்லா ரென்க. அன்றியும், அம்மையினது அங்கப் பிரத்யங்கங்களில், நூறுதிக்யப் பிரசங்கஞ்செய்தது மிவ ருக்குச் சிவாபராதத்தை விளைத்த துணர்க.

இனியிவர் கூர்மபுராணத்திற் சில பாடல்களை யெழு திக்காட்டி "ஸ்ரீராமபிரானுல் சரபங்க முனிவரும், அயோத்தி நாட் டுள்ள சராசரங்களும், கண்ணபிரானுல் வேதியரும, அவர் பன்னிய ரும், மாலாகாரனும் கஞ்சனும் முத்திநல மெய்தினமை சிவானுபூதிச் செல்வராகிய அதிவீரராமபாண்டியன் திருவாக்கானு முணர்க" என்றுசெருக்கித்தருக்கினு. அதிவீரராமப்பாண்டியனுர் பா டியது கூர்மபுராணத்தின் மொழிபெயர்ப்பு. மூலத்திலிருந்த தைத் தமிழிற பாடியதேயன்றி அவரது சொந்தக்கருத்தது ஒன்றுமிலலை. இவ்வாறு விளக்கவறியாது அவரது சொநதக் கருத்துப்போல இராமகிருஷ்ணாகளது மோக்ஷகாத்ருத்வ த்தை நமதன்பர் பிரஸ்தாபித்தார். பாண்டியர் பெருமான் இராமகிருஷ்ணர்களை மோக்ஷபிரதாதாக்களாகத் துணிந் திருக்கும் பட்சததில் விஷ்ணுவையே அவராசிரயித்து இன் பங் கைகூடப்பெற்றிருப்பர். அப்படி யடைநதிருநத பட்சத் தில், அவரை நமது பூர்வபட்சியார் "சிவானுபூதிச் செல்வா" என்று புகழ்ந்தது மிகையாம்! சிவாநுபூதிமானுகிய அவரு க்கு முத்திநலங் கைகூடியது அச்சிவபரஞ்சுடராலென்பது திண்ணம· பாண்டியா பெருமானைச் "சிவாநுபூதிமான்" எனறு நமதன்பா பூஷிததாரன்றே? அவ்வநுபூதியுடையார்கருச் சிவப்பேறேயன்றே இவரொப்பத்தககது? அப்படி யொப்பு வாராயின், அதனை முததியென்று இவர் துணிவாரா? அல் லது ஸாமானியமான வொருபதவி யென்று துணிவாரா? உண்மை முததியென்று துணிவாராயின், இதற்கும இராம கிருஷ்ணர்கள் கொடுத்ததாக இவரொப்பிய உண்மை முத்தி க்கும் பேதமென்னை? சிவனும் முத்திகொடுபபவர் - விஷ் ணுவும் முத்திகொடுப்பவர் என்று இவர் துணிந்து கூறுவா ராயின், சிவன் குரஙகாகி மனுஷ்யனுகிய இராமனைச் சுமந்

தானென்றதன் பயன் யாது? விஷ்ணுவே முத்திகொடுப்ப வர், சிவன் பதமுத்தி கொடுப்பவர். அந்தப் பதமுத்தியை யே அதிவீரராமபாண்டியன் அடைந்தானென்று கூறுக் கால் வேறுகதியில்லை. அதனை யாமொப்புவோமா! ஒருக் காலு மொப்போம். இனிக் கூர்மபுராணத்தில இராமகிருஷ் ணர்களால் முத்தி பெற்றவர்களாகப் பிரஸ்தாபிக்கப்பட்ட வர்கள் பதமுத்தி பெற்றவர்களென்று துணிந்து கூறினமை யே பாண்டியா பிரானது உண்மைக்கருத்தென்று துணிந்து அடங்குக. விஷ்ணுவுக்குப் பதமுத்தியேயன்றி உண்மை முத்திகொடுக்கும் யோக்யதையின்றெனனுஞ் சைவபட்சத் தை யொருவாறு ஈண்டு விளக்கிக் காட்டுவோம்.

## இருசமய விளக்கத் தெளிவு.

"ஆகாயந்தனைத்தோல்போற்சுருட்டுமவனேசிவனை
யடையாதென்றும்
போகாவெந்துயாநீங்கிப்பெருந்துவரின்பதிலெனப்
புகலுமேபொய்
யாகாச்சுவேதாச்சுவதரமிதறசென்பகர்வா
யணங்கேகேநீதான்
கூகாவெனறழுமொழிசிற்சிலகூறிமழுப்பினைநின்
கொடுமையென்னே"

"முகுந்த[illegible]னைல்வீண்கண்டாய்முத்திதரமாட்டானை
முதனூல்காட்டா
தகந்தைமொழிகூறியதா லாவதெவனெங்களறு
பததுமூவ
ரிகபரங்கள்கடந்தபரமுத்தியையேயெய்தினரிவ்
வியல்புதேரா
துகந்துரைத்தாய்மாலடியார்முத்திபெற்றாரெனல்பொய்யா
யொழிந்ததன்றே"

"முத்தியெனல்பிறந்திறக்குந்துயாகடத்தலெனவேத
முழங்குநின்மால
செத்துதித்தலியல்பாமச்சிறுதெய்வம்பிறந்திறவாச்
செல்வந்தனைப்

பத்தர்தமக்கீயுமெனல்பொய்யாமகின்றாழ்வார்கள்
பாகிலேற்ற
முத்திபதமுத்தியெனவோராய்மெய்ம்முத்திபெற
முடியாதன்றே"

"அரியருளும்பதமுத்திதானுமவன்றனையதிட்டித்
தாலின்மேய
பானுதவுமன்றியுமால்பங்கயனிந்திரன்வாழ்வும்
பரிந்துபோற்றிக்
கரமழுமானுடையானை யருச்சித்தேயெய்தினரக்
கடவுளேமெய்ப்
பரமெனவேதங்கள்பகர்ந்திடுமுதநிதருமவனைப்
பணிவாமன்றே"

என்று கூறிய வாக்கியங்கள் நமதன்பருக்குக் கண்ணை த்திறந்து வழிகாட்டுமென்க. இதுகாறு மிவர் "இருசமய விளக்கத்தை" நம்பி மோசம்போனவர், இப்போது நல்ல காலம் பிறந்ததாகையா லின்னுங் கொஞ்ச மிவருக் கெடுத் திசைப்பாம்.

இவருதகரித்த கூர்மபுராணத்தி லொரு விசேடசரித் திரமிருக்கின்றது, என்னெனில் பிரகலாதன் அரசு புரிந் திருக்குங் காலததில் துருவாசர் அவனிடம வந்தனர். அவ ரைக்கண்டெழுந்து வழிபடாமல் வாளாவிருந்தனன் இர ணியகுமாரன். அப்போது அவனைப்பார்த்து உனக்கு விஷ் ணுவினது தயையிருக்கிற தென்கிற மமதையால் சிவ பக் தாகளை நீமதித்திலே போலும். அந்தவிஷ்ணுவைச் சிவபக்த ரென்று நீ யறிந்திலே. சிவபக்தராகிய அவரிடத்தும் உனக் குத் துவேஷமுண்டாகக்கடவது என்று சபித்து அப்புறம் போயினர் முனிவர் பெருமான். இந்தப் பைத்தியக்கார னென்னவோ உளறுகிறு னென்று அப்போது முதாசீ னமா யிருந்துவிட்டான் பிரகலாதன். பின்பு சிலநாள்கழித்து முனிவர்சாபமுதிர்தலும் அவ்விராக்கதனுக்கு ஒரு யோ

களை பிறந்தது. எங்ஙனமெனின், என்னுடையபிதாவை அநியாயமாய் விஷ்ணு கொன்றுவிட்டான். பிதாவைக்கொன்றவனை நாம் விரும்பிவாழ்வது நீதியா? பிதாத்ரோகியென்று பேரெடுத்து வாழ்வதைக்காட்டிலும் உயிர்துறத்தல் தகுதியாம். இப்போதேபோய் எனது பிதாவைக்கொன்றவனைக் கொன்று பழிக்குப் பழிவாங்குவேனென்று ஆவேசத்துடனெழுந்துபோய்த் திருப்பாற்கடலையடைந்து விஷ்ணுவைச்சண்டைக்கழைத்தனன். விஷ்ணு மூர்த்தி அதிசயித்து இது சிவனடியாருக்கிழைத்த தீங்கின்பயனுமென்றுணர்ந்து அவனுக்குப் புத்திபுகட்டி அம்முனிவரைச் சரணடைய வுபதேசித்தனர். என்னோடு போர்புரியவஞ்சியோ நீ போக்குக்காட்டுகிறாய் என்று பரிகசித்துச்சண்டைக்கே அழைத்தனன் அவ்விராக்கதன். அதற்குமேல், முனிவாசாபத்தைத் தெளிந்த விஷ்ணுபகவானெழுந்துவந்து சதுரங்க சேனைகளோடு சண்டைக் கெதிர்பார்த்துக்கொண்டிருந்தவனை யெதிர்த்துப்போராடினர். அவன் அவரோடு போராடமாற்றலிழந்து உடைபட்டுத்திசைதடுமாறி யோடியொளித்துப் பின்வருமாறுயோசித்தனன். நாம் விஷ்ணுவை நம்பியபலன் அவலமாகியது. முனிவர்பெருமானிட்ட சாபத்தைக்கடக்கமுடியாமல் இந்தக் கதியாயினோம். சிவபத்தராற்றலின் முன்னர் விஷ்ணுபத்தராற்றல் தலைதூக்காதென்ப தின்றுகண்டோம். இனிச்சிவபெருமானுக்கே நாமாட்பட்டுப் பிழைக்கவேண்டுமென்று துணிந்து முனிவர்பெருமானைத் தேடிச்சென்று பணிந்து அவருபதேசத்தாற் காசியையடைந்து சிவலிங்கபிரதிட்டை செய்து பூசித்துய்ந்தான் என்று பிரகாசப்படுத்திய கூர்மபுராணத்தை மொழிபெயர்த்தருளிய பாண்டியர்பெருமான் விஷ்ணுவை முத்திநாதனெனத் துணிந்தாரென்று இவ்வசங்காத்மவாதியார் (பூர்வபட்சியார்) பிரசங்கித்தது நிஷ்பலமாயினதறிக. இதற்குமுன்னர்க் காட்டிய வாமனபுராணம் "నారాయణాదినామాని విస్పృశ్యన విచారతః । జపేచ్ఛివాదినామాని శుద్ధ్యము త్రింయదీచ్ఛృతి" என்று கூறி நாராயணாதிநாமங்களை யொதுக்கிச்

சிவாதிநாமங்களை யுச்சரித்து ஸாதுக்களுய்யடக்கடவர் என்று பிரகாசப்படுத்தியது. இவற்றையெல்லாம் நமதன்பர் நன்குபரியாலோசித்து விபரீதம்விலகிச்சுகிப்பாராக. நிற்க.

இவர் சிவபெருமானுக்குப் பலபிறவிகளுண் டென் று சாதிக்கத் தொடங்கினர். எங்ஙனமெனின், சுகர்-அத்திரி-அசுவத்தாமர்-ஔரவர்என்பவர்கள் ருத்ராவதாரங்களென்று கருடபுராணங் கூறுகிறதென்றும், அதிற்றனே ஏகாதச ருத்ரருள் விஷ்கம்பன் என்பவர் கிருபாசாரியாராகவும் பத்திரதாமன் என்பவர் சோமதத்தராஜனாகவும் பிறந்ததாக கூறப்பட்டிருக்கிற தென்றும் பிரசங்கித்தனர். அன்றியும், பாரதவெண்பாவில் சிவனாரது அவதாரம அசுவததாமர் என்று சொல்லப்பட்டிருக்கிற தென்றும, பாகவதத்தில் அததிரி முனிவருககுச் சிவன துர்வாசராகத் தோன்றினுரென்று கூறப்பட்டிருக்கிறதெனறும, சதபதப்பிரமாணத்தில சிவனுக்குப் பிறப்புண்டென்று சாதிககப்படடிருககிறதெனறும் நமதன்பராசைதீரப் பேசியொழிததார். இநத ஸந்தாப்பத்தில் அநுமான சிவாவதாரமென்று சாதிபபதிவருக்குப் பெருமையாகவும், இவா தேடிய நூல்களிவரை யேமாறறிவிட்டன. வடமொழிப்பாரதத்தில ஜமதக்னியுஞ் சிவாவதாரமென்று கூறுவதாக வொன்று பிரஸ்தாபித்தாா. இந்த ஜமதக்னி மகன் பாசுராமன். இதனுல, சிவனுக்கு மகன் விஷ்ணுவென்பதே சித்திக்கது. இனி யிவர்காட்டிய பிரமாணங்களில் அத்திரி சிவனென்றூா. மீண்டும் அத்திரிமகன் (துர்வாசர்) சிவனென்றூர். இவை புத்தி சுவாதீனமில்லாதவனெழுத்தேயன்றிச் சுவாதீன புத்தியுடையவனெழுத்தாகாது. இவரெவ்வளவெழுதினும்விஷ்ணுவுக்குப் பிறப்பில்லை யென்பதற்காதாரமாயினதில்லை. சிவனுக்குப் பிறப்புண்டாயிருப்பது போல விஷ்ணுவுக்கும்பிறப்புண்டாயிடுதல் குற்றமாகாதென்று சாதித்ததே இவர் துணிவாயிற்று. சிவனுக்குப் பிறப்புகளுண்டென்றும், அவை நிர்த்தோஷமாவனவென்றும் யாம்

கௌரவிப்பதாயின, அதனையிவா தழுவித்தலையெடுக்கலாம். சிவனுருக்குப் பிறப்புகளில்லையென்றும், பிறபபுண்டாயிருத்தல் ஸாமான்ய ஜீவதருமமென்றுங்கொணடு பிரவர்த்திக்கு மெமது மததத்தோடொட்டிப் பின்றொடர்த விவருக்குத் தலையிடியாமென்றுணர்க. இவரே இவரது பிரசங்கத்தில் ஏகாதசருத்ரருள், விஷ்கம்பன் - பத்திரதாமன் என்பவர்கள் பிறப்பையெடுதகெழுதினர். இவ்வேகாதசருதத்திரர்கள் சிவஸாரூப்யம் பெற்றுச சிவபாவனை யெயதினவாகள். இவர்களைப்போல் சதருத்ரர் - ஸஹஸ்ரருத்ரர் - கோடிருத்ரர் முதலினோரது பிரஸ்தாபங்கள் நூல்களிற் கேட்கப்படுகின்றன. திருக்கழுக்குன்றத்தில், ருத்ரகோடியென்றொரு திவ்யாலயமிருக்கின்றது அதுகோடிருத்ரர்கள் சிவாராதனஞ்செய்துய்ந்த பெருமிதமுடையது. ஸ்தாணுருத்ரா - விசாலாட்சருத்ரர் முதலிய உருத்திரா பிரஸ்தாபங்கள் பாரதத்திற் கேட்கப்படுகின்றன. இவ்வாறு எண்ணிறந்த வுருத்திரர்கள் கேட்கப்பட்டவிடத்தும், இவர்களையெலலாம் சிவனென்றே சாஸ்திரங்களுபசரிக்கும் இதற்கு வேறுஸாட்சி வேண்டியதில்லை. திருக்கோயில்களி லெழுந்தருளியிருககுஞ் சிவாமூர்த்தஙகளைச் சிவஸாரூப்யமெய்தியிருத்தல கண்டு ஸாக்ஷாத் சிவமென்று யாம் வழிபட்டு இஷ்டஸித்திகளையும்பெற்று வாழ்கிறோம். இவைகள் சிவமாகியும், அல்லவாகியும் விளங்குந்தன்மையே மேற்குறித்த உருத்திரபேதங்களிடத்துங் கொள்ளத்தக்கது. இதனால், நமதன்பர்காட்டியஅவதாரங்கள் சிவஸாரூப்யமெய்திய குணருத்ரர்கள் பரமாயொதுங்கினவென்க. திரிமூர்த்திகளி லொருவராகிய உருத்திரரே பரமசிவமாகாத பெற்றியை மேலே யாம் பிரகாசபபடுத்தினோ மாகையால், நமதன்பர்காட்டிய அவதாரங்களுக்கு அதிஷ்டானமான உருத்திரபேதங்களைப்பற்றிய கவலை எமக்கின்றென்க. இவர்காட்டிய அவதாரங்களில், தூர்வாசர் திரிமூர்த்திகளிற்சேர்ந்த உருத்திராவதாரம். இந்தவுருத்திரர் எல்லாவுருத்திரர்களிலும் மிகச்சிறந்தவர்.

இவருக்குக் கர்ப்பயோகிஸம்பந்தங்கள் கிடையா. இவரது அவதாரத்தை "ఏకాంశేనాస్య సంభవం" என்னும் வாக்கியத்தால் ஸ்ரீஹாரததத யோகிகள் தமது சுருதிஸூக்திமாலையில வியந்து துதித்திருக்கின்றனர். அத்திரி பத்னியாகிய அநஸூயாதேவியினது தவத்துக் கிரங்கித் திரிமூர்த்திகளுந் தரிசனந்தந்தனர். நீவிர்மூவரும் எனக்குப புத்திரர்களாக வரக்கடவீரகளென்றுவரங்கேட்ட அவ்வம்மையாருக்கு அப்படியே வருவோமென்று வாக்களித்தனர் மூவரும இவவாறு அநுக்கிரகித்துமறைந்த மூவருள், நடுநின்ற சிவன் அஞ்சலியோடு நின்றஅவளுடைய கூபபிய கையினின்றும் சிசுவாக உடனேகீழே குதித்தார். அப்படிக குதிக்கிறபோது "துர்வாஸ:" என்று சொலலிககொண்டே வநதனர. உன்னுடைய கர்பபத்திலவசிததலும, யோகிவாயபபாடடு வருதலும எம்மாலியலா அவை துர்வாஸம் என்று சொல்லிக்கொண்டே வந்தமையால் "துர்வாஸர்" என்னுந் திவ்யநாமம அவருக்குண்டாயிற்றுஎன்று வெளிபபட்ட சத்தியார்த்தத்தைச் சநறகுமார ஸம்ஹிதையில "స్వల్పాంశేనావతర్సః" என்று பிரகாசபபடுத்தி யிருக்கின்றது. இஙகே வந்தவர் குணருத்ரரானமையால், இவர் துரீயருத்ரரலலரென்பது போதரவே இவரை "స్వల్పాంశే" என்று விளக்கி அம்சாவதாரமென்று போதித்தது ஸ்வல்பாம்சத்துக்குங் கர்பபயோகிஸமபந்தங்களும, ஜநநமரணங்களுங் கிடையாவெனபது இதனுலேறபட்ட துணரது விஷ்ணுவைப் போலச் சிவனும பிறந்தாரென்று துர்வாசரை யெடுத்துக் காட்டிய வஸநகாத்மவாதம் இத்தோடே தொலைந்ததெனக. பாராசரபுராணத்தில, "యోఽసక్తోహం రుద్ర ఉత్కృష్ట, స్యాంబకేష్వభిశేషణ" என்னும் வாக்கியம் புராணங்களில சிவனுக்குக் கூறிய அபகர்ஷஙகள் குணருத்ரர் பரமெனவும், அவருக்குக் கூறிய உத்கர்ஷங்கள் ஸாக்ஷாத் அவருக்கே யெனவும், விஷ்ணுவுக்குக் கூறிய அபகர்ஷங்கள் அந்த விஷ்ணுவுக்கே யெனவும்,

அவருக்குக் கூறிய உத்கர்ஷங்கள் ஸ்வதந்திரியாமியாகிய சிவ பரஞ்சுடருக்கெனவும் வியவஸ்தையுண்டாகத் தெரிவிக்கின் றது. இதனால், சிவனார் பிறந்தார் என்னும் அபகர்ஷமும், விஷ்ணு பிறக்கவில்லை என்னு முத்கர்ஷமும் ஜீவிப்பது கஷ்டதரமென்றடங்கி யொடுங்குவாராக. இனி யெமது சிவபரமாத்மாவை "బ్రహ్మవిష్ణురుద్రేన్ద్రాస్తే సమ్ప్రసూయన్తే న కారణం। కారణం తు ధ్యేయశ్శంభుః" என்று வேதமறுதியிட்டுரைத்தது. பிரம விஷ்ணு ருத்ரர்களை "நகாரணம்" என்று தள்ளி, அவர்கள் பிறப்பிக்கப்பட்டவர்களென்றும், அவர்களைப் பிறப்பித்தவர் தியேயராகியசம்பு சப்தவாச்யரென்றும் பிரகாசப்படுத்திய துணர்ந்த சாம்பவர்களுக்கு (எங்களுக்கு) எத்தனை சிவாவதாரமுனிவர்கள் பேரை யிவரெடுத்தெழுதிக்கொண்டாலுந் துக்கமுண்டாகவாவசியகமில்லை யென்றறிக. அவ்வுருத்திரக் கூட்டங்களை இவரது விஷ்ணுவுக்கு அபகர்ஷ மூர்த்தங்களாகமதித்து வழிபடப் பின்னிடேமென்க. கேவலம் பாஷாணத்தைச் சிவபாவனையால வழிபடுமெயாம் நாமரூபவொற்றுமைக்ளால் சிவபாவனை மேலிட்டு விளங்கிய திரிமூர்த்தியுருத்திரனை ஸாக்ஷாத் சிவமென்றே வந்தித்துச் சிவப்பிரஸாத மெய்தியின்புறுவே மென்க. பிரம விஷ்ணு ருத்ராகளை "நகாரணம்" என்று முன்சுருதி யொதுக்கியதுபோல வேறொரு சுருதி "బ్రహ్మవిష్ణ్వీశానేంద్రాదీనామత్యాప్సవశ్శాంజీవః" என்று எழுந்து அவர்களை ஜீவர்களென்று பிரதிஷேதித்துவிட்டது. உருத்திரமூர்த்தியைப்போல விஷ்ணு பிரமர்களும் ஜீவர்களாயிருந்துகொண்டே கிருத்ய கர்த்தர்களாய் அதிகாரஞ்செலுத்துகின்றனர். இவருள், பிரமனுக்குச் சிருட்டியும், விஷ்ணுவுக்கு ஸ்திதியும், உருத்திரருக்கு ஸம்ஹாரமும் சாஸ்திரங்களிற் சொல்லப்படினும், உருத்திராதிஷ்டானமேயேனையிருவரிடத்தும் வியாபித்து யாவும் நடத்துமென்க. பிரமனுக்கும், விஷ்ணுவுக்கும் அதிகார பாக்யங்கிடைப்பினும், சிவரூபப்பிராப்தி இன்னும் வரவில்லை. வரப்பெற்றுக்கொண்

டவர் சஙகாரமூர்த்தியே. இம்மூவருள், பிரமனைக்காட்டிலும் விஷ்ணுவும், விஷ்ணுவைக்காட்டிலும் உருத்திரரும் அந்தஸ்தி லுயர்ந்தவர்கள். இவர் செய்யுங்காரியங்களில், பிரமனையதிஷ் டித்துச்சிருட்டியையும், விஷ்ணுவை யதிஷ்டித்து ஸ்திதியை யும் உருத்திரமூர்த்தியேசெய்திடுவர். தமது சங்காரத்தைத் தாமே செய்வர். ஆதிவாரம் - சோமவாரம் - மங்களவாரம் - புதவாரம்-குருவாரம்-சுகரவாரம்-சநிவாரம் என்று வாரங் கள் தனித்தனிப் போவாரியாய்ப் பிரிந்திருப்பதன்றி அந்தந்த வாரங்கள் அவைகளைப் பேராகவுடைய கிரகங்களால் பிர காசிப்பதில்லை. ஆதிவாரம் அல்லது ஆதித்யவாரத்தில் ஆதி த்தன் ருேன்றிப் பிரகாசப்படுத்துகிருன். சோமவாரத்தில் சந்திரன்ருேன்றிப் பிரகாசப்படுத்துகிருனு? மங்களவாரத் தில் அங்காரகன் வெளிவந்துலாவி யுபகரிக்கிருனு? இப்படி யே மற்றவாரங்களினுங காண்க. எல்லாவாரங்களிலும் சூரி யனெருவனே தோன்றி அவர்கள் மானத்தைக்காபபதுபோ லச் சிருட்டிதிதிகளிரண்டையுங்கூட ஸம்ஹார கர்த்தாவே செய்து நடைபெறச் செய்கின்ருரென்பது வைதிக ஸித்தாந் திகள் துணிவென்றுணர்க. இவ்வுருததிரருக்கு மேலிட்ட (சதுர்த்த) மூர்த்தியை "శివమద్వైతంశాంతం చతుర్థంమన్యన్తే" என்று வேதம் பிரதிபாதிககின்றது. இத்துரீய சிவமூர்த்தி யை நமதன்பரெங்கே யறியப்போகிருர்? அவர் சந்நிதியிலொ ன்றுக்கும் பற்ருத விஷ்ணுவைக் கையிலே பிடித்துக்கொ ணடு அவர் வேஷம்போட்டுக் கூத்தாடும வேஷகோலங்களா கிய இராமகிருஷ்ணுதிகளை அளவுக்கதிகமாக மெச்சி இவர் சிவதூஷணையிலிறங்கிச் சீரழிவது மிகு பரிதாபமெண்க.

இவர் விஷ்ணுவினது பிறப்புகள் பிருகு சாபங்காரண மாகத்தோன்றின வலலவென்றுசமாதானங்கூற வெழுந்தார். இவ்வாறு கிளம்பியவர் "அரிஅரன் அயனுதிவானவர்களில் முனி வர் கொடுத்த சாபத்தைத் தழுவாது நின்ருேர் யாவர" என்று வழு க்கி வீழ்ந்தார். இவரது விஷ்ணுவுக்கு மானபங்கம் வராமற்

காத்துக்கொள்வதொழிந்து அந்த விஷ்ணுவைப பிடித்த சநி யின் கையில் பிரமருத்ரர்களையுமபிடித்துக்கொடுக்கத் தலைப் பட்ட தென்னையோ? உருத்திரமூர்த்தியை யொரு சநியுந் தொடருமாற்றல் வகித்திலதென்க. முதல விஷ்ணுவைச் சா பமணுகுமென்றொபபியதைப பினனா மறுத்து "இறைவனது திருவவதாரங்கள் யாவும் சங்கற்பமாத்திரையானே நிகழ்ந்தனவன் றிச்சாபத்தாலல்ல" என்று சந்தோஷித்தாா. இதனைவிரிக்கவே ண்டி மத்ஸ்யாதி நான்கு அவதாரங்கள் தாய் வயிற்றில்லா மலும், வாமனாதி ஆறு அவதாரங்கள் தாய் வயிற்றிருந்தும் பிறக்குமாறு முனிவா சாபமோ? என்று கடாயினா. இது ஒரு கேள்வியா? மத்ஸ்யாதிநான்கு அவதாரங்களில் தா யைத்தேடாமலும், வாமனாதிஆறு அவதாரங்களில் தாயைத் தேடியும் பிறந்துழல விஷ்ணுவுக்கிச்சையோ? என்று யாம் கடாவுகிறோம். இதற்கென்ன விடை? தாயில்லாத அவதா ரங்கள் மிருகங்களும், தாயுள்ள அவதாரங்கள் மனுஷ்யப் பிற விகளுமாயின. தாயில்லாத கௌரவம் மிருகத்தன்மையா லும், தாயுள்ள அகௌரவம் கர்ப்பயோநிஸம்பந்தங்களா லும் அழிந்தன. இரண்டுவிதமுங கேட்டுக்கே காரணமாயின துணராமல் நமதன்பர்வாய்திறந்தது தோல்வித்தானத்திலே யே அவரை நிறுத்திய தென்க. இனி மத்ஸ்யாதிகளுக்குத் தாயில்லையென்று இவரெங்கே கண்டார்? யாதேனுமொரு மீன்-ஆமை-பன்றிகளின் வயிற்றிலேதானிவர் பிறந்திருப் பர். தாய்ப்பன்றியாதிகளு மிவரைப்போலப் பிரஸித்தமாயி ருந்தால், இன்ன பன்றி - இன்ன மீன் - இன்ன ஆமையெ ன்று சுட்டி விவகரிக்கலாம். அநாமதேய ஜடங்களாகிய விஷ்ணுவினது பிறப்பிடங்களை(காப்பயோநி வடிவங்களைப்) பிரகாசப்படுத்தாததுகொண்டு மத்ஸ்யாதிகளுக்குத் தாயில் லையென்றது அஸத்வாதமாயினதறிக. நரசிங்கனுக்குத் தாய் கருங்கற்றூணென்றறிக. இத்தூண் மிருகாதிகளினுந் தாழ் ந்த இடமாம். இதனுலெல்லாப் பிறப்புகளுந் தாயையிடமா கக்கொண்டு கர்மாதீனமான சாபத்தாற் பிறந்தன வெனவே

வியக்தமாகியது. இந்தப் பிறவிகள் கர்மாதீனமாகாதன வெனின், இவை செத்தகதை கேட்கப்படாதிருத்தல் வேண்டும். இவரது இச்சாவதாரங்கள் போனகதிக்கு ஒருகதி தேடி எந்தக் கபோதியுபநிஷத்தாவது கொண்டுவரட்டும் பார்ப்போம். இந்த மத்ஸ்யாதிகளடைந்த கதியை "సోఽమత్స్యకూర్మాదివరాహసింహః | స్త్రిష్ణుక్రమంత్వంవామనమాద్యవిష్ణుం | సవిష్ణుబింబోద్భవమానసం" என்னுமுபநிஷத்வாக்கியத்தாலறிந்து ஸாதுக்கள் ஸந்தோஷிக்கின்றார்கள். இவ்வாறு அலக்கணெய்திச் சாவது கர்மாதீனமாகாது வேறு யாதாகும்? இவரது பரிகாரம் பல்லிளித்துக்கொண்டிருப்பதறியாது சேஷாவதாரமாகிய இலக்குமணனை என் பத்தில் சேர்க்கவில்லையென்றும், அச்சேஷாவதாரமாகிய பலராமனை மாத்திரம் சேர்த்தவிதம் யாதென்னும், இவ்வாறுசாபமிட்டவர் யாரோவென்றும் ஒரு கேள்வி பிறப்பித்தார் இவர் கேட்டவிதங்களுக்கு யாவர்சாபங் காரணமோ எ[?]க்குத்தெரியாது. தெரிந்திருந்தால இவ[?] சொல்லிச சாபத்தைப் பூர்த்தி கட்டட்டும. ஆதிசேஷன் விஷ்ணுவினது பாயலான வொரு ஜீவன் விஷ்ணு வொரு ஜீவன். விஷ்ணுவுக்[?] பிருகுவிட்ட சாபம் சேஷனுக்கு மிட்டிருந்தால அவ[?] பிறந்து செத்தகதைகளும வெளிப்படும். சிவனே யென்று படுத்துப் புரண்டு தூங்கிக்கொண்டிருக்குமவனை யிங்கேஇழுத்துப்போட்டது பரிதாபமென்க. பலராமனைச்சேஷனென்றது வைஷ்ணவ ஸித்தாந்த வழக்கு. பலராமனை இவரே விஷ்ணுவவதாரமென்று பலதரங்கண்டாகோஷமாய் முழங்கியதை இங்கே மறந்தார். இவரது ஊழற சமாதானத்தில "பரசுராமாவதாரமிருக்கும் போதே ஸ்ரீராமாவதார மெடுத்ததும, பலராமாவதார மிருக்கும்போதே கிருஷ்ணாவதாரமெடுத்ததும இச்சாமாத்திரை யன்றோ" என வெழுதிக்கொண்டதில், பலராமனையும கிருஷ்ணனையும சாக்ஷாத் விஷ்ணுவினது அவதாரங்களென்று சாதித்தது என்னுவது? இப்படி வார்த்தை புரண்டு பேசும் வழக்கம் சமதன்பரினத்தவர்க்குப் பாலன்ன முண்பதுபோலாம்.

இனியிவர் "தசாவதாரம் சாபவயத்ததாயின், ஒன்றொழிந்த பின்னன்றோ மற்றொன்று வருதல்வேண்டும். இறைவன் கிளைப்பின் ஒருநிமிஷத்தில் முனிவர் சாபப்படி பத்து அவதாரத்தையு மெடுப் பினுமெடுப்பன், எடுக்காதொழிப்பினு மொழிப்பன், கிருஷ்ணவதாரம் சென்ற இந்த ஐயாயிரம் வருடம் வரைக்கும் பத்தாவது அவதாரம் எனெடுக்கவில்லை? அவன் சர்வ சக்தனுகிய ஜகதீசனுதலாலே சாப வசத்தனல்லனென்பது பெறப்பட்டது" என்று முடிவுரை கூறி யுப சாந்தியடைந்தார். சாபங்காரணமாகாமல் இச்சைகாரா ணமாகிப் பிறவிகளெடுத்ததாயின், ஒரே காலத்திலிருந்த பரசுராம ரகுராமர்கள் கைகோர்த்து விளையாடி மகிழ்தல் வேண்டும். பரசுராமனை ஸ்ரீராமனுதைத்ததெற்றுக்கு? பரசு ராமனுதைபட்டது இச்சையோ? சாபமோ? கர்மமோ? விவேகிகள் சொல்லட்டும். ஒன்றிருந்த காலத்திலொன்றிருக் கச்செய்து வினையை மூட்டியதே சாபத்தின் பயனென்று ணர்க. பலராமனும், கிருஷ்ணனுமொத்து வாழ்ந்தார்களா? சுபத்திரையை அர்ஜுனனுக்குத் திருட்டுத்தனமாகக் கிருஷ் ணன் கொடுத்தனுப்பினுன். பலராமன் அதை விரோதித்து அர்ஜுனனைக் கொல்லக் கலப்பையைத் தூக்கிவந்தான். இதற்கிடையில் பலராமகிருஷ்ணர்களுக்கு ஒரு துவீபத்தில் சிவராதனை மஹோத்ஸவ வைபவங்கள் கேட்கப்பட்ட சைவ நலம் அதிக வியப்புடைத்தே! இதனுல, விஷ்ணுவையும், அவரது அவதாரங்களையும் கர்மத்தினடியாக வியக்குமெமது கருணாநிதியின் செயலே எவற்றிற்கும ஆதாரமாய் நின்றவா றறிக. "அரிபிரை தவதாரச் செயல்கள் யாவு மரன்செயலா மாலறி யாதகதை கூறல்-திரிவாகு முடல்வால தருண மூப்பின் செயலுயி ரின் செயலாகுஞ் செய்தி போலும்-விரிவாமைந் தொழிலையு மெம் மிறைவன்றனே மிகுபடர்க்கை முன்னிலைத்தன் மையிலுண் டாக் கும்-தரியாதன் பிரமனுடன் பரசு ராமன் சமர்பொருத கதையுலகிற் சாற்றலீரே" என்ற வழுதவாக்கியத்தை நமதன்ப ரினி யேனும் தரிசித்து இன்பவாழ்வெய்துவாராக.

இனியிவர் "இறைவன் நினைப்பின் ஒரு நிமிஷத்தில் முனிவர் சாபப்படிப் பத்து அவதாரத்தையுமெடுப்பினு மெடுப்பன்

எடுக்காதொழியினு மொழிப்பன்" என்றானன்றே? இது பெரியவிந்தையாம். எடுப்பினுமெடுப்பன் என்றதனால், அவ்வாறெடுத்தல் அவ்விறைவன் சம்மதவாறாகின்றது. இதற்கு மாறாக நமதன்பர் எடுக்காதொழிப்பினு மொழிப்பன் என்றது என்னமதி? எடுப்பினு மெடுப்பனென்பதற்கிணங்கவே அவர் பத்துப் பிறப்புகளெடுத்தமையால், எடுக்காதொழியினு மொழிப்பனென்றது அஸத்துரையாயழிந்தது. அவ்விறைவன் பிறத்தற்குச் சாபத்தையுங் காரணமாக்கிவிட்டு "அவர்நினைப்பின்" என்று மீண்டும் அவரது நினைவைக் கொண்டுவந்து குறுக்கேநிறுத்துதல் அஸம்பாவிதமாம். அவர் நினைத்தாலும், நினையாவிட்டாலும் பிருகு சாபம் பிடரியைப்பிடித்துத் தள்ளிக்கொண்டுவந்து பல கர்ப்பயோநிகளிற் செலுத்திப் பிறக்கச்செய்யுமென்பதே தீர்மானம். இம்மட்டிலமையாமல் இறைவன் நினைப்பின் "ஒரு நிமிஷத்தில்" பிறப்பனென்றும் சாபங்காரணமானால் "கிருஷ்ணாவதாரஞ் சென்ற இந்த ஐயாயிரம் வருடம் வரைக்கும் பத்தாவதவதாரம் எடுக்கவில்லை" என்றுங் கடாவியதும் நிஷ்பலமாம். வராகம்பிறந்தது வராககல்பம் - வாமனன்பிறந்தது வாமனகல்பம். இவ்வளவு தூரத்தை யபேக்ஷித்தகாலங்களிற் பிறந்த விஷ்ணுவுக்குக் கிருஷ்ணாவதாரங்கழிந்த இந்த ஐயாயிரம் வருஷம் அதிக காலமாய்விட்டதாக நமதன்பர் மனஸ்தாபப்பட்டது விசாரணையின் குறையேயாம். இன்னுமெத்தனை ஐயாயிரவருடம் சென்று பத்தாவது அவதாரமெடுக்க விஷ்ணுவை முனிவர் சாபஞ்செலுத்துமோ அதனையாமறியேம். ஒரு நிமிஷத்திற்பிறவிகளெடுப்பதானாலும், கற்பங்கள்கடந்து பிறவிகளெடுப்பதானாலும் முனிவர் சாபமே முன்னின்று செலுத்துமென்றறிக. இறைவன இறைவன் என்று நமதன்பர் மாரடித்துக்கொள்ளுகிறார். இறைவனை முனிவர்சாபந்தொடராது. லீலையாயேனும் இறைவன் அதனையேற்று நாடகம்புரியான். "இருவினைக்கு முரியவனா யிப்பிறந்து படுமெரியை யிறைவனென்று-சுருதிமுறை யிடுமாயினு மெரியாகுமெனச் சொற்றனன்

னே" என்று கூர்மாலய தேவர் கூறியருளிய திருவாக்கும் நமதன்பர் வாய்க்குப் பெரும்பூட்டாயினதறிக. நிற்க.

இவர் பிருகுமுனிவர் விஷ்ணுவுக்குக் கொடுத்த சாபம் அவரிடமேறாமல் கொடுத்தவரையே துன்பப்படுத்தியதென்றும், அதனால் அம்முனிவர் விஷ்ணுவை வெகுகால மாராதித்து அபராதம் நீங்கப்பெற்றதன்மேல் விஷ்ணுவானவர் முனிவரைப் பார்த்து லோக ஸம்ரக்ஷணார்த்தம் உமது சாபத்தை நாமங்கீகரித்து அவதாரங்களெடுக்கிறோமென்று வாக்களித்து, அவ்வாறே யங்கீகரித்தாரென்று வான்மீகம் உத்தரகாண்டங் கூறுகிறதென்றும் ஒரு பொய்ப்பிரசங்கஞ்செய்தனர். முனிவர் கொடுத்த சாப மேறவில்லையென்று இவர் முதல் தடைகூறினும், முடிவில் ஏறியதாகவேயன்றோ முடிந்தது? இடையில் இவர் செய்தது ஜாலவித்தையேயாம். கடைசியிலங்கீகரித்துக்கொண்ட விஷ்ணுவானவர் முதலிலேதானே ஏனங்கீகரிக்கக்கூடாது? அன்பர்வாக்கைப் பரிபாலிப்பதானால் இடையில் முனிவரையலக்கணுறச்செய்தல் கூடுமோ? அம்முனிவர் விஷ்ணுவுக்கு அன்பரானால் அவர் சாபங் கொடுக்கத்துணிந்தது அஸங்கதமாம், தனது சாபஞ் செல்லக்கூடிய இடத்தை ஒருவன் தெய்வமென்று கோடலும் எப்படிக்கூடும்? இவ்வஸம்பாவிதங்களுக்கு நமதன்பர் சமாதானங்கூறமுடியாதாகையாலும், "ஜானகியைக் கொண்டது மோசாபத்தாலமமானே" என்ற இவர் மெச்சிய பிள்ளைப்பெருமாளையங்காரே பாடினமையாலும், இவர் பிரஸ்தாபித்த வான்மீகம் உத்தரகாண்டம் இவரிஷ்டம்போற் கூறியதின்மையாலும் இவர்செய்த பிரசங்கம் யாவும் ஊஷரபூமியிற்செய்த கிருஷியாயிற்றெனவறிக.

நமதன்பர் இதனை யிவ்வளவினிறுத்திப் பழையகடையைக் கொஞ்சம் பரப்பிக்கொண்டார். என்னெனின், இராமோபநிஷத்தில், "ஏ உருத்திரமூர்த்தி! நீயே வாயுபுத்திரனு

அவதரித்து நமது ஏழாவது அவதாரத்துக்குத் தூதனாகவும், தொண்டனாகவும், அமைச்சனாகவும், வாகனமாகவும் எப்பொழுது மிருக்கக்கடவாய். நாம் உனக்கு நவவியாகரண பண்டிதத்வமும், விசுவரூபமும், கல்பாந்தத்தில் அமிர்தத்வமும் கொடுக்கிறோம்" என்று சிவனைப் பார்த்து விஷ்ணு சொன்னதாக விரிவுரை கூறியதன்றியும், தாரஸோபநிஷத்தில் "ஸ்ரீராமஷடாட்சரங்களுக்கு அதிதெய்வங்களைச் சொல்லுமிடத்தில் மகாராக்ஷரத்துக்குச் சிவாவதாரமாகிய அநுமான் அதிதேவதையென்று இரண்டிடத்தில் கூறப்பட்டனன்" என்றும் பிரசங்கித்துத் திருப்தியடைந்தார். சந்திரனிடத்தில் முயற்கறை யுண்டென்று பெரியோர் கூறுவர். அதற்கு இவர்காட்டிய இரண்டுபநிஷத்துக்களும் இரண்டு கொம்புகளாம். இவ்விரண்டில் முதற்கொம்புக்குக் கோவிந்தாசாரி யென்பவர் தங்கப்பூண்கட்டி விநோதசாலையில் வேடிக்கைபார்க்க வைத்தாராம் அதாவது ஷை யுபநிஷத்தை இவரது சுவடியின் கடைசியிற்சேர்த்து அச்சிடச்செய்தவர் அவராம். அவராயினும், இவராயினும், எவராயினும் பொய்யுரைபுனைந்து முன்னுக்குவருதல்கூடுமோ? நூற்றெட்டுபநிஷத்துக் கோவையிற் படிக்கப்படாத இவ்வுபநிஷத்துக்களை நமக்கன்பரினியேனுந் திலதர்ப்பணம்பண்ணி இனப்புறக்கடவர்.

இனிக் கோவிந்தாசாரி யுபநிஷத்திலுள்ள கோணலைச் சிறிதெடுத்திசைப்பாம். விஷ்ணுவானவர் சிவனைநோக்கி நீ எனது ஏழாவதவதாரத்தில் தூதனாகவும், ஸேவகனாகவும், வாகனமாகவும் குரங்குருபமாகப்பிறந்துழலக்கடவாய் என்று பணித்தாரென்று கூறியது சாலவழகுடைத்து. எனது ஏழாவதவதாரத்தில் என்று பிரஸ்தாபித்தமையால் ஒரு அவதாரமுமெடுப்பதன் முன்னரிந்தக் கட்டளை பிறந்ததாக எண்ணவேண்டியிருக்கின்றது முந்திய ஆறு அவதாரத்திலும் சிவனது சகாயம் வேண்டியதில்லைபோலும். அப்படி வரக்கூடிய தூதனைக் குரங்காயவர ஏனோ விரும்பவேண்டும்? ஏழாவது அவதாரம் மனுஷ்யரூபம். தனக்குச் சத்ரு

வோ இராக்ஷஸன். தான் விரும்பத்தக்க தூதன் அல்லது அமைச்சன் மனுஷ்யனாகவாவது, இராக்ஷஸனாகவாவது அமைந்திடலே ஸங்கதம். இந்த நியதிக்குமாறாகவெழுந்த விஷ்ணுவினது குரங்குப்பிடி சாலச் சிரிப்புடைத்து. இதற்கு மேல விஷ்ணுவானவர் சிவனுக்கிட்ட வேலைகளை "நீ எப்போதுஞ் செய்துகொண்டிருக்கக் கடவாய்" என்று விதித்ததாகவுந் தெரியவருகின்றது. இராமன் சலத்தில் (சரயூநதியில்) வீழ்ந்துமாண்டான். அவன் மனைவி மண்ணில் (பூமியின்கீழ்) படிந்து மடிந்தாள். இவர்களுடைய தூதன் - சேவகன - அமைச்சன்-வாகனம் என்று சொல்லத்தக்க அநுமான் (நந்தியநுக்ரம பெற்றதனால்) சிரஞ்சீவியாய் இன்றுமிருக்கிறான். இவன் இராமனுக்கு எப்போதுந் தூதுவனாகவும், ஸேவகனாகவும, அமைச்சனாகவும, வாகனமாகவுமிருந்து ஏவல்செய்வதைக் கோவிந்தாசாரியுபநிஷத்துக் காட்டவேணடியது. அவ்வுபநிஷத்தைக் கையிலே பிடித்துவந்த பூர்வபட்சியாவது இராமனை யுணடுபண்ணி அநுமான் பக்கல விட வேண்டியது. குரங்கு க்ஷேமமாயிருக்கிறபோது இராமன்மாண்டது அதிக பரிதாபமென்க. குரங்கு க்ஷேமமாயிருப்பதற்கு நமதன்பர் காரணமறியார். ஏனைய வைஷ்ணவருமறியார்கள். இந்தக் குரங்கு ஒரு (சிவரூபமபெற்ற) உருத்திராவதாரமாகையால் சாகாது. உருத்திரவடிவமெய்திய எத்தனைகோடி ஜீவர்களும் சாசமுறார்கள். இந்தச் சிரஞ்சீவியை இராமாயணமுத்தம் முடியும்பொருட்டுச் சிவனார் தந்தருளியதுபோலப் பாரதயுத்தம் முடியும்பொருட்டு மற்றொரு சிரஞ்சீவியை (அசுவத்தாமாவை) உருத்திராம்ச மெய்தினவனாகத் தந்தருளின ரவ்வெம்பெருமானென்றுணர்க. தசாவதாரங்களும் உச்சம் என்று வாதிட்டுவருந்தும் வாதியார் எந்த அவதாரத்தையாவது சாகாமல் நிலைக்கப்பார்த்தாரா? துஷ்டர்களைச் சிதைத்த மூர்த்தங்கள் அந்தத் துஷ்டர்கள் செத்ததுபோல

(அப்போதில்லாவிடினும்) பின்னர்ச்செத்தது கர்மாதினமு டையனவென்றதையே ருசுப்படுத்தியது. இராவணனுஞ்செ த்தான் இராமனுஞ்செத்தான் என்றது அதிக ஈனமன்றோ? கம்ஸனுஞ்செத்தான் கண்ணனுஞ்செத்தான் என்றது ஸா துக்கள் மனசுக்கு அதிக் கஷ்டமன்றோ? இந்தத் துஷ்டர் களைச் சிக்ஷித்த விஷ்ணுவவதாரங்களைக் கர்வபங்கப்படுத்த வந்த விநாயகர் - ஸ்கந்தர்-வீரபத்திரர்-பைரவர் முதலிய சிவ பராக்ரம விக்ரகங்கள்பேரில ஒரு தோஷாரோபிதமுண்டா? இவை சிவனாது நித்யமங்கள விக்ரகஙகளாம். இவ்வுண்மை தேராது நமதன்பா ஐச்சவாதம்பேசி ஸைச்சிகம்பண்ணுவது ஏச்சுவாதமாகவே முடிந்ததறிக.

இவரிதநோடே நிலலாமல் அநுமானுககு நவவியாக ரண பண்டிததவம - விசுவரூபம் - அந்ததிலமிர்தத்வங்களை விஷ்ணுபகவான் பிரஸாதிபபதாகக கோவிந்தாசாரியுபநிஷத் துக்கூறியதை யெடுத்திசைததாரனறோ ? இதையுஞ் சிறிது விசாரித்து ஒழுங்குபடுத்துவாம். இநத வியாகரணோபதேசம் இராமன்செயதானா? விஷ்ணுவே யுள்ளிருந்துணர்ததினரா? அல்லது வேறு யாரைககொண்டாவது செய்வித்தாரா? இவ் வுபதேசம (பகவத கீதை சணடை ஸமபிரமத்தில நடந்தது போல) இராமராக்ஷஸ யுத்தகாலததில நடந்ததா ? சீதை யை மீட்டுககொண்டு வீடுவந்து சேர்ந்த சாவதானத்தில நட ந்ததா ? அநத வுபதேசத்தால் அவனுக்கு என்னலாபம்? அவன் யாதேனும் வியாகரண சந்திரிகை தன்பேர் விளங் கச் செய்தானா ? நமது இலக்குமணப்பிள்ளை தமக்குக கொ ஞ்சமிலக்கணங்தெரிந்த மாத்திரத்தானே இரண்டுபிரபந்தஞ் செய்து குரங்குக்கு முன்னே யொன்றும், இராமனுக்கு மு ன்னே யொன்றும் போட்டு மகிழ்வாராகில் ஒன்பது வியா கரணங்களை யொக்கப்படித்த குரங்கு வீரன் சும்மாவிருக்க

முடியுமா ? குரங்கு யாண்டுஞ் சும்மாவிராது. இந்தக் குரங்கு சிவனென்பது பூர்வபட்சிகள் மதம். சிவனையோ "ஜ்ஞாநம் மஹேச்வராதிச்சேத்" என்று கூறி, யாவரும் ஞானத்தின்பொருட்டுச் சிவனை யாசிரயிக்கவேண்டியது என்று அன்னோர் கொண்டாடுவர். பிறருக்கு ஞானத்தைப் பிரஸாதிக்கத் தக்க (சிவாவதாரமான) குரங்குக்கு வியாகரணோபதேசம் பரிகாசத்தை விளைக்கத் தடையென்னே ? இதற்கு மேற் போந்த விசுவரூபம் கோவிந்தாசாரி யுபநிஷத்தில் அநுமானுக்கு ஆராதுக்கென்று கூறியிருக்கிறது. நமது பூர்வபட்சியார் தமது பிரசங்கித்தினோர்மூலையில் அநுமான் வாயுவினது அமிசத்தால் வேகத்தையும், உருத்திராமிசத்தால் விசுவரூபத்தையும் பெற்றானென்று கூறியதை அவ்வுபநிஷத்து உணர்த்துகின்றது அல்லது அவ்வுபநிஷத்தை நமதன்பர் வாதம் உணர்த்துகின்றது என்று பிறர் சொல்லக்கூடியதில்லை. ஈசுவரமிசம் அல்லது அநுக்ரகம் பெற்ற அநுமானுக்கு ஸர்வஞானமும், விசுவரூபமும், அம்ருதத்வமும் ஸித்திப்பது ஸித்தமாகையால் பூர்வபட்சியாரது கலிஸந்தாபநிஷத்துக் கலிகல்மஷாந்தகார வுபநிஷத்தாயினது சத்தியமென்றறிக. விரிக்கிற் பெருகும். நிற்க.

இவர் ஸ்காந்தாந்தர்க்கத ஸநற்குமார ஸம்ஹிதை யொன்றும், ஸ்காந்த பஹிர்க்கத ஸநத்குமார ஸம்ஹிதையொன்றும் பிரமாணங்களாகத்தேடி மீண்டுங் குரங்கு விஷயத்தில் இறங்கினார். முதல், அந்தர்க்கத ஸம்ஹிதையில் சிவன் தேவர்களை நோக்கி நான் அநுமானாய்த் தோன்றி இராமதூதனாயும், இராமஸேவகனாயும், இராமவாகனமாயுமிருந்து இராவணாதிகளை யழித்து உங்களை ரக்ஷிக்கிறேனென்று வாக்களித்ததாயும், இரண்டாவது பஹிர்க்கத ஸம்ஹிதையில் பிரமன் சிவனை நோக்கி நீ அநுமானாய்த் தோன்றி இராமனுக்குச் சகாயமாயிருந்து தேவர்களை ரக்ஷிக்கக்கடவா யென்று கூறி

தலும், அதற்கிசைந்து நான் ஸர்வ ஜாக்ரதையாயிருந்து இராமகாரியங்களை நடத்துவேனென்று சிவனொப்புக்கொண்டதாயும் நமதன்பர் மகிழ்ந்து வெளியிட்டதை நிர்மூடனும் மதியான். விஷ்ணுவே சிவனை நோக்கி நீ அநுமானாகப்பிறந்து எனக்குத் தூதுவனும், ஸேவகனும், அமைச்சனும், வாகனமாயுமிருந்து ஊழியஞ்செய்யக் கடவாய் என்று பணித்ததாக நமதன்பர் மேல் கூறியதற்குத் துணைக் கையொப்பங்களாக இங்கே சிவனையும், பிரமனையும் ஸாக்ஷிபோட்டுக்கொண்டார். ஸ்காந்த பஹிர்க்கத ஸம்ஹிதையைப்பற்றி எமக்காவசியகமில்லை. ஸ்காந்தாந்தர்க்கத ஸம்ஹிதை எமது (சைவர்களது) தஸ்தாவேஜாகவேணும். ஸ்காந்தம் சிவபுராணம் பத்தனுட் சிறந்து விளங்குவது. இது லக்ஷங்கிரந்தமுடையது. இதிலடங்கிய ஸம்ஹிதைகளாறனுள் ஸநற்குமார ஸம்ஹிதையொன்று. இந்தச் சைவஸம்ஹிதையில் சிவநிந்தை கிடந்ததாக நியாயவாதியப்பு கடந்து கூறிய விபரீத வார்த்தைக்கு யாங்களேன் கண்மூடாரும்? இவர் தேடிய பஹிர்க்கத ஸம்ஹிதையைப்போல ஸூவரது அந்தர்க்கத ஸம்ஹிதையை யாம் (பஹிர்க்கத ஸம்ஹிதையென்று) தள்ளிவிடுதலே நியாயவாதிகள் சபையில் மணந்திடத் தக்கதெனக. இந்தப் பிரமாணங்களோடினமாகத் தக்க (வழவழராமாயணம்) யாகயவல்கயராமாயணம் (குழகுழராமாயணம்) பிருகத்ராமாயணம் (லபலபராமாயணம்) மஹாராஷ்ட்ரராமாயணம் (சளசளராமாயணம்) தெலுங்கு ராமாயணம் இவைகளைத் தேடி "பலவும் தின்றால் ஒரு அவிழ் தட்டாதா" என்பதற்கிணங்கச் சிவனைக் குரங்காக விளக்கிக் கும்மாளம் போட்டுக் கூத்தாடினார். இலக்குமணப்பிள்ளை ராமாயணம்—துரைசாமிமூப்பனார் ராமாயணங்கடோன்றிச் சீவிப்பதற்கதிகமாக இவர் தேடிய குப்பைராமாயணங்களை வான்மீகம் படித்தவர்கள் மதித்துப் பிரஸ்தாபியாரெனக. கம்பராமாயணமே காலைக்கிளப்பிக்கொள்ளும்போது இந்த வம்புராமா

யணங்கள் வரிசைபெற்று வாழ்வதெங்கே? இடையில் அவர் பட்டதும் படாததுமாகப் பிரஸ்தாபித்த வாயுபுராணம் சிவபராக்ரமங்களைக் கூறுவது. இதிற் குரங்குச்சேட்டை கிடையாதென்றொழிக. இதற்குமேல் கம்பனது (வாதசேயைப்) "புராரிமறறியானே வாதசேய்" என்ற துண்டை வாயிற் கௌவிக்கொண்டு வந்து எமக்கு மீண்டுமிவர் புதுமைகாட்டுகிறார். இதற்கினமானதும், (கிலுஷ்ட கல்பனத்தால்) இதறகினப்படுத்தக கூடியதுமாகிய வேறு இரண்டொருபாடல்களையுந் தேடிவந்து வெளிச்சங் காட்டினார். பின்னவையெலலாம வாதசேயி லந்தாக்கதமாகையால, "வாதசேய்" வாதசசேய் என்று இக்கணவிதியேற்று நிலைபெறத்தக்க சமயத்தில் அதனோடு கூண்டோடே தொலையுமென்க. வாதச்சேய், வாதசேயென்றாகியது தொகுத்தல் விகாரமென்பார் போலும். கவிச்சகரவர்ததி பாடலில் விகாரங்காணுதல் கூடாதகாரியம். பிசகாயப் பாடிவிட்டு, பின்னரதற்கு ஸமாதானந்தேடுதல கௌரவக் குறைவெனவறிக. "புராரிமற்றியானே வாயுபுத்திரனென்று" என்றெழுதினால் ஸாதுவாகுமே. அது கம்பர் பாடியதாயிருந்தால், சரியாய்த் தானிருக்கும். அவரது மானஙகெட யாரோ வொரு(வமபன)பாஞ்சராத்திரி திருத்திவைத்ததாகையால், அதனை கேடினைத்தென வீண் டறிவித்ததாயிற்றென்க. இவரித்தோடே கம்பனைத் தொலைத்துச் சொழிஅருணசலக கவிராயரைத் துணைதேடிச சற்று இளைப்பாறினர். இவருக்கு யாம் ஸாதுவாகவே பதிலளிக்கிறோம்.

இவரது கவிராயர் "அதிகமான ருத்ரனக்கிசனறுமலேன்" என்று பாடியதால், அநுமான் சிவனென்று சித்தித்தது என்றும், அவர் அநுமார் பிள்ளைத்தமிழ்பாடியதில் அநுமானைச் சிவனென்று விளக்கினரென்றும் புகழ்ந்தார். கவிராயா "அதிகமான ருத்ரனக்கிசனறுமலேன்" என்றாரேயன்றி "அதிக

மானருத்ரனநுமனுகத் தோன்றி'' என்று கூறவில்லை, "அதிகமான ருதரன" என்றமையால, பரமாத்மா ருத்ரனென்று அவர் கொண்டதுணிபு வெளிபபட்டது. அவர் பிறவாதவராகை யால, அவரது அங்கிசன் (அநுக்ரகததைப் பெற்றவொரு வன்) அநுமசீலனென்று தெரிவித்தனா. இந்தபிரசங்கத் தால் நமதன்பருக்குண்டான ஸாதகம் யாது? இவரோ அநு மான் சிவனது பூரணுமிசம பூரணுமிசம் என்ற பொங்கி வழிகின்றவா. இவரது பூரணககுரஙகை அமிசகட்கததாற் கவிராயர் சேதிததுவைத்தாராகையால், இவரது எண்ணத் துக்குக் கவிராயா பாடல் விகாதம்பணணியதாகவே முடிந் தது. பிளளைத்தமிழு மிதனேடுதானே யிணைபபடடொதுஙகிய வாறறிக. இந்தககவிராயா அநுமான் சிவனுனைறதைப் (புத்திசாலிகள் தெளியும்பொருட்டு) பின்வாககாலும இனி து பிரகாசபபடுததினா. அநுமான் சஞ்சீவி பர்வதங்கொ ண்டு வரப்போன ஸந்தர்ப்பததில ஸ்ரீ கைலாசததைநெருங்கி யவனைச்சுட்டி ஸ்ரீபாாவதியாருக்கு ஸ்வாமி காட்டியதாகவும் அப்போது அவன் ஸ்சுவாமியைத்துதிகது அப்பாறசென்ற தாகவும "தலங்கும வெளளியங்கைலையீசன - உமைக்குக் கையா லே - வாயவின சுதனிவனெனறு காட்ட, அவரைத்துதிசெய்தப் பாலே" சென்றனென்னும் பகுதியால் நன்கு விளக்கினர். "வாதசேய்" என்று கமபனவாக்கு இழுக்கடைந்ததுபோலா காமல "வாயுவின் சுதன்" எனறு இவாவாககுச செழித்தோங் கியதறிக. அம்மையிடம வாயுசுதனைப பிரஸ்தாபிததபகவான் எமது அமிசமாகிய அநுமான் என்று ஏன்சொல்லவில்லை? அவ்வநுமான் தானுகியசிவனை ஏன்துதிசெய்து போயினன்? கம்பராமாயணக்கடலைக் கரைகண்டவராகப் பூர்வபட்சிவழு த்திய சீகாழிக்கவிராயர் கம்பன் கூற்றாகாத "ருத்ரனங்கிசன நுமசீலன்" என்ற (தனது) சித்தாந்தத்தை காட்டி நமதன்ப ருக்குத் துக்கத்தை யூட்டியவாறென்னை? இந்தக்கவிராயர்

இராமநாடகமாத்திரமேயன்றி வேறுநூல்களுஞ் செய்திருக்கின்றனர். அவற்றுள், தமது ஸ்வக்ஷேத்திரமாகிய சீகாழித் தலபுராணமொன்று. இந்தப்புராணத்தில், "பிறந்திறந்துழல் தெய்வமாம் பிணங்களைப் பாடி-யறந்துறந்தலைந் தொழிந்தனை யரும் பெருங் காழி - சிறந்த மான்மியம பாடெனச் சிதம்பர முனிவன் - அறைந்த சொற்கொடு சொற்றனன் பிழைவிதையே" எனனுமிந் தத் திருவாக்கால இராமனையே பிறந்திறக்குந தெய்வபபிண மென்று வெளிபபடுததினா இராமனையே திண்டாட்டத்தில விட்டிருக்கும்போது அநுமானை அவா மதித்தாரெனல யாங்ஙனம? இராமநாடாகம பாடிய தோஷததை கவிராயா பரிகரித்துக்கொண்டமையால், ஸ்ரீ கைலாசபரமபரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ சிதமபரநாதமுனிவருக்கு அடிமைபூண்ட அவருக்கு விஷ்ணுபாதவபுததி யாண்டுமுண்டாயினதின்றெனவறிந்திடுக. "இனைய காதையீண் டியம்பவும் வல்லனோ தருமை-முனைவனைபுசால சிதமபர நாதமா முனிவன் - வினையு மாரிய மொழிவழி யருந்தமிழ் வகையால் - எனைவிளம்புகென் றேதனு மிது துணிந்தனனயான" எனனுந திருவாக்கால, சைவசித்தாந்த சிகாமணியாய விளஙகினா கவிராயரொனறு தெற்றெனவிளங்கியது. விரிக்கிறபெருகும். நிற்க

நமதன்பர் சைவ பரமாசாரியா நூலகொண்டு அநுமான் சிவனென்று தாபித்ததாக மகிழ்ந்தார். எஙஙனமெனின், ஸ்ரீமத அருணகிரிநாதருளிய திருபபுகழில 'கருவடைந்த' என்னும் பாடலில "நெடுநீலன-எரியனென்று மைப்பற்றுசண்டனுமனென்று மொப்பற்றவண்ட - ரெவருமிந்தவாக்கதது வந்து" என்று கூறப்பட்டிருக்கிறதென்றும், இதனை யநுஸரித்தே அனந்தபாரதியாரெனபவர் தாமியற்றிய இராமாயணத்திருப்புகழில் அநுமான் சிவாம்சமெனறு கூறினரென்றும், இந்த

வுண்மைகெடுமாறு மழவை மகாலிங்கையரும், புஷ்பரத செட்டியாரும் ஷை பாடத்தைத் திருத்தினாகளென்றும், அவ்வாறு திருததியும அவர்கள திருததிய பாடங்கள் சந்தச் சிதைவுகொணடு விளஙகுவதால் அன்னோரது மனோரத மீடேறவிலலையென்றும கைகொட்டிச் சிரிததுமகிழ்ந்தார். ாண்டிவரது சிரிப்பு அழுகையாய்ப் போகும்படி எமதுண் மையைச சிறிது பிரகாசபபடுததுவாம.

இவரெடுத்துக்காட்டிய "மைபபற்றுகண்ட னுமனென் றும்" எனனும பாடம எநத ஆதீனத்து ஏட்டுப் பிரதியிலுள் ளது? அலலது எந்த பூர்விக சைவவிதவான்களிட மிருந்த பிரதியைப்பார்த்து எழுதியது? அலலது எந்தப் பெரிய பண் டிதா வெளியிடட அசசுபபுததகத்திலிருந்து எடுத்தெழுதி யது? இதறகொரு கதிகாட்டாம லிவரெழுதிக்காட்டிய பா டம (அநுமானமேல ஆணை) முககாலுந தபபுபபாடமேயாம. எடுததுககாட்டொனறுமிலலாதி இவா கீறிவைத்தது சபை யேற மாட்டாதென வறிநதிலாபோலும. இவா பிரஸ்தாபி த்த பாரதியாா இராமாயணத திருபபுகழ் பாடியபோது இரா மாயணத்தை யநுஸரிக்க வேணடியது கடமை. அப்படிக் கின்றித் திருப்புகழை யநுஸரித்தாரெனல யாஙஙனம்? அந்தப் பாரதியாா தான அருணகிரியாா திருபபுகழை யநுஸரித்து இதனைப பாடினேன் என்று யாதேனுஞ் சொன்னாரா? வீணபவாததததைப் பாரதியாரமேலேற்றிக் களித்தது அவ ரைத் தூற்றியதாகவே முடிந்தது. ஒருகால அவர் சிவனே அநுமான் என்று பாடியிருந்தால அது வான்மீகத்தாலுதை யுண்டு அழியுந தன்மையாய்க் கேடுசூழப பெறுமென்க. "திருப்புகழ்" என்பது "கருப்புகழைக்கேட்குமோ காணமயில்வீர ன்றிருப்புகழைக்கேட்குஞ் செவி" என்ற திருவாக்கானு மறிந்தி

